# திருமுல்லைவாயிற்புராணம்.

கற்பனையைத்தான்கடந்தகாமருசீர்முல்லைக்
கற்பகத்தைக்கூப்பாதகையென்னகையே
காரணனைக்கூப்பாதகையென்னகையே. (௩௩)

அண்டத்தார்க்கப்புறத்துமானனைமாமதியத்
துண்டத்தானைத்துளக்கில்சோதியனைமாமறைசொல்
பண்டத்தானைப்பரிவாய்ப்பாற்கடனஞ்சுண்ட
கண்டத்தானைக்கருதாக்கருத்தென்னகருத்தே
கருமணியைக்கருதாதகருத்தென்னகருத்தே. (௩௪)

விண்டானையானிமுன்மேவிமறைநான்கும்
கண்டானையெவ்வுலகின்காரிகையையோர்புடையே
கொண்டானையுள்ளமென்றுங்குழையாதார்தம்மையிக
ணண்டானையறியாதவறிவென்னவறிவே
அமலனையேயறியாதவறிவென்னவறிவே. (௩௫)

வேறு.

அடைவினின்னணர்ந்தோர்த்திரம்புகன்றவாலோனுங்
கடையனேனறிபாதகனுவதுகருதி
யுடையநாயகபுகல்பிறிதின்றெனவோர்ந்திப்
படியின்மேலெழிற்கருணைபாலித்தனைபரிவால். (௩௬)

நீலகண்டவெண்டோளவாணிலாவணிசடில
மூலகாரணமும்மதின்முறுவலானெரித்த
பாலலோசனபராபரபரிந்தெளிவந்த
சீலமென்னணுஞ்செப்புகேன்சிறியனேனெந்தாய். (௩௭)

என்றுகூறியெட்டுறுப்புநன்னிலமுறவேத்தக்
குன்றவார்சிலைகோட்டியகுழகனுமனையாற்
கன்றுசாலவுமிரங்கிநீயாற்றியபூசை
நன்றுகொண்டெனநின்பவமிரிந்ததாலிவின். (௩௮)

பொன்னளித்தவெங்கயப்பிணிபுனிதநீர்ப்பொய்கை
தன்னுடைப்பரிசத்தினுனசன்றதுதாவில்
நின்னிலைக்கணேயடைகெனவிறையவனிகழ்த்திப்
பன்னருஞ்சிவக்குறிவயிற்கரந்தனன்படியம். (௩௯)

உடுக்கணத்திறைமாசிகந்தோங்குமாமணியைக்
கடுப்பநின்றுதன்பெயரினைச்சுவினகர்த்தென்பால்
இடத்தொர்பொய்கையையகழ்ந்துசின்னுளினிதிருந்து
கடுக்களத்திறைவிடைபெறீஇத்தன்கதிசார்ந்தான். (௪0)

பொன்னிடுங்கொடுஞ்சாபத்தாற்புழுங்கியவாலோன்
மன்னும்பூம்பொழின்முல்லையைமணமகிழ்ந்திறைஞ்சித்
துன்னருங்கழுவாயுறும்பரிசுசொற்றனமேல்
அன்னவன்மனைக்கிழத்தியர்வழிபடலறைவாம். ([illegible])

சந்திரன் கழுவாய்ப்படுபடலமுற்றிற்று.

---

# அசுவினிமுதலியோர்வழிபடுபடலம்.

பொன்பூத்தமகரந்தப்பொருட்டலர்வாழ்க்கையருகப்பொலியுமேலோன்
மன்பூத்தபுகழ்க்கிரதுபுலகனங்கிராத்தருமன்வசிட்டன்றக்கன்
கொன்பூத்தபெருந்தவத்தத்திரிமுன்னோர்த்தயரிமொன்றுங்குறிக்கருஞ்சீர்த்
தென்பூத்ததக்கனுந்தன்றாதைதனையிறைஞ்சியிதுசெப்புமாலோ. (௧)

நிலவுலகத்திடையொருமுத்தொழினடத்துமவர்தம்மினொன்று
தலைமையுடையானெவனெத்தன்மையானவனென்னச்சதுமுகத்தோன்
நலமந்தமின்மறைசொற்றிடுமமரர்தமிற்றலைவனருவெண்டிங்கள்
இலகுசடைப்பரம்பரனேயனாதிமலமுத்தனெனவியம்பக்காண்டி. (௨)

நித்தசருவஞ்ஞதையனாதிபோதந்திருத்திவிலவுத்த
சத்திசுவதந்திருதையோடனந்தசத்திமுன்னாந்தகுகுணங்கள்
அத்தகுசிற்பானுக்கேயுரித்தாமென்றினிதெடுத்திங்கறையுமாண்டான
மெய்த்தவாகமஞ்சிறந்ததெனவறிதியென்றும்வியன்புலமைமிக்கோய். ()

சிருட்டிமுன்னாமுத்தொழில்கடன்கருணையாற்பொதுவிற்செய்யும்பாலத்
திருக்குடையானருவியருதொழுகும்வடகயிலையெனுஞ்செய்வரான
வரைப்பினென்றுந்திகழுமொருநாற்றிரள்களொடுமருவிமரபினென்றும்
இருக்குமுன்னாங்கலையெனைத்துமுழுமுதலென்றெவனையெடுத்தியம்புங்கண்

சருவகாரணன்சருவபூதமணியன்சருவாபீட்டநல்கும் [டாய்.
ஒருவனவன்றன்னன்பர்வேண்டியனவேண்டியாங்குதவாநிற்பன்
அருமகவாயென்னுழைவந்தாயவனைநீயின்ஞான்றன்பினுடிப்
பொருவருமெய்த்தவம்புரியிற்பெறலரும்பேறெய்திமிகப்பொலிவைகண்டாய்

அன்னதுகேட்டொருதக்கன்றாதைதனையிறைஞ்சிவிடையன்பாலேற்றுத்
தன்னிகரின்மானதவாவியையணைந்தாயிரம்யருவந்தவஞ்செய்கிற்பக்
கன்னியொருபாற்பிரியாக்கருணையார்கலியணுகிக்கரையுநீயு
மென்னவிழைந்தென்னோக்கித்தவஞ்செய்தாயெனவவனுமியம்புமாலோ. (௬)

பொலம்பூத்தகொன்றையந்தார்பூத்தமதிச்சடைபூத்தபுனிதமுந்நீர்
நிலம்பூத்ததிருவுந்திப்பெருமானுநான்முகனுநேடிக்காணா

வலம்பூத்தமழுவாளியெனநினையேநாடுகிற்பார்மருவுமெந்தாய்
குலம்பூத்தநலம்பூத்தகொள்கையேனலனெனையுங்குறித்ததென்னே. (௭)

காண்டன்மூன்றுமளவைகளாற்காண்பரியபரம்பரனைகருத்துக்கெட்டாச்
சேண்டயங்குபேரொளியேசிற்பரைதான்பிரியாததெய்வஞான
ஆண்டகையேயாரணமாமறைப்பயனையறிவறியாச்சிறியனேன்பா
லீண்டெளிவந்தருளியவாறென்னேயோவறிபகிலேனெந்தாயெந்தாய். (௮)

பாசமகலாதுபதியிற்கலவாதிருக்குமின்பப்பரவைதன்னை
மாசகலவருளுருவதன்றேவுமையோர்பாலுடையவள்ளால்ஞான
பூசனைசெய்வாருள்ளப்பூங்கோயின்மருவியவற்புதமேயென்பாற்
பேசவெளிவந்தனையானின்கருணையிருந்தவாபேசற்பாற்றே. (௯)

வேறு.

என்றதக்கனுமம்மையப்பனையெய்தநோக்கியனைத்துமென்
தன்சிருட்டியினைந்திடப்பரைதானுமென்றவமாண்பினான்
இன்றேர்மாமசவாகநீயுமெனக்குமாமருகாகவே
மன்றவாணவரந்தராயெனமன்றநாடியிறைஞ்சினான். (௧௦)

அன்னதாகுகவென்றபின்றையெமண்ணல்மால்விடையூர்ந்தெழிற்
கன்னியோடுமகன்றனன்கயிலாயமால்வரைகாதலான்
பின்னுமற்றவன்வேதவல்லியெனும்பெருந்திருவேட்டபின்
தன்னதானைநடத்திறன்றெருதக்கமாபுரியின்கணே. (௧௧)

அன்னளோடவனன்றிருன்விழைபோகமங்கயர்வான்புரிந்
துன்னரும்புகழ்துன்னுமாயிரமைந்தர்தம்மையுவந்துதந்
தின்னறீர்தரமெய்த்தவம்புரிசென்றுமானதவாவிவா
யென்னையாளுடையானைநாடியவினிதவர்க்குமியம்பினான். (௧௨)

தந்தைசொற்படிமைந்தர்சென்றுதவம்புரிந்தனர்தந்தைபோல்
எந்தைதாளையிறைஞ்சியாக்கலெனுந்தொழிற்குரியாரெனாச்
சிந்தைநாடியகின்றனர்சிவஞானமீதலவென்றவர்
புந்திதன்னிலைமாற்றுவானவணெய்தினான்புகழ்நாரதன். (௧௩)

வேறு.

மைந்தர்கேண்மினிந்தஞாலவாழ்க்கைநீரின்மேலெழுத்
திந்தநீர்மையென்றுகண்டுநுந்தையெம்பிரானிணைச்
சந்தமாமலர்ச்சரண்டனைப்பழிச்சிவீடுபே
றந்திலெய்திடாவணந்தடுத்தவாறதென்கொலோ. (௧௪)

கற்பமெத்துணைக்கழிந்தகரியமாலுமயனுமே
சிற்பமென்றதோன்றிநின்றழிந்தநீர்மைசெப்புதற்

கப்பரன்றணுதருட்பரிசினன்றியாவதோ
எய்ப்பில்வைப்பெனுஞ்சிவன்றனைக்கருத்திலெய்தினீர். (கரு)

தந்தைதாய்தமர்முதற்சமூகமுனைத்துமிவ்வுடல்
வந்தவாறுநோக்கினுன்மரபுளிப்பொருந்துமோ
அந்தமாதியேயிலாவரன்கழற்கணன்புறுஞ்
சிந்தையாளர்சேர்வரிச்செகத்திநீர்மையாவுமே. (கசு)

வந்தவாறுநாடிலீர்வருந்திநின்றுமெய்த்தவம்
புந்திநைந்துபுரிவதும்புராணனைப்பொருந்தவோ
நந்துகைத்தலத்துமாதர்நலனுறத்துணிந்ததோ
எந்தைசொன்மினென்றனனிருந்தவத்துமேயினுன். (கஎ)

வேறு.

என்றுகூறியநாரதனிணையடியேத்தி
ஒன்றுமாதவர்கேட்டியாலும்பரானடியை
இன்றுநன்குறும்பரிசெமக்கியம்பிடிங்கென்ன
மன்றவாணனையிறைஞ்சியம்மாதவன்புகலும். (கஅ)

ஞானமேயொருமூவகையெனமறைநவிலும்
ஞானமேதவமென்பதுநாடவர்மரபால்
ஊனமேயவிபாசஞானம்முயர்பசுவின்
ஞானமேபதிஞானமென்றிலகிடுநலத்தான. (க௯)

ஓதிடும்பாசஞானநால்வாக்கினற்பகுதி
வேதமாதியகலையெனவிளம்புசொற்பயவுஞ்சம்
நாதமீறெனக்கிளத்தியநற்பொருட்பவஞ்ச
பேதமோடெனப்பெரிதுநின்றுணர்திர்மெய்பிறங்க. (௨0)

ஏதிலாப்பசுஞானமீண்டிவற்றினைக்கொண்டு
போதுமாருயிரினையதம்புடைவியாப்பியமென்
றோதுநீர்மையையுணர்ந்தவைகழன்றுநின்றோங்கு
மாதொர்பாகனேயெனத்தமைமதித்திடுமதுவே. (௨க)

சந்தமார்பதிஞானமாவதுதகுபானெய்
இந்தனத்தெரிகலிவயினிரதமெள்வயினெய்
அந்திலென்னநின்றிடுமிறைவனையடிஞானச்
சிந்தைசெய்தவன்றிருவருளானறிவதுவே. (௨௨)

அன்னமாதொருபாகனையந்தரியாகம்
என்றுமெய்தரும்பூசனையியற்றிடுமேலோர்
தன்மையீதெனச்சொற்றிடுந்தகையதோவரன்சீர்
என்றுமேவியவைந்தனீரென்றியம்பினனால். (௨௩)

அவ்வருந்தவரனைவருமவனுரையென்னும்
செவ்வழிக்கணைநின்றுசிர்சபாநடம்புரிவோன்
எவ்வமில்பெருங்கருணையாலொன்றினரிணையோன்
கவ்வைதீர்தருங்கமலச்சேவடிநிழல்கவின. (உச)

பின்னருந்தக்கனுயிர்மகார்தமைப்பெற்று
முன்னனுப்பியவாறுபோலிவரையுமுன்னி
மன்னுமானதவாவிவாய்ச்செல்கெனவிடுப்ப
அன்னமாதவனன்னணம்புரிந்தனனன்றே. (உரு)

தக்கன்மீச்சினந்தித்தருகொடுமைதான்புரிந்தான்
நற்கடற்புலத்தோரிடநயர்துமேவாமே
எக்கணுந்திரிதருகெனவிட்டனன்சாபம்
திக்கெலாமிகச்சலித்தனதிரிந்தனவுலகம். (உசா)

நங்கைமார்தமைநல்கியோநாணிலவரைப்பி
னெங்கணும்விருத்தியைமிகச்செய்வலென்றெண்ணிச்
சங்கைதீர்தரவிருபதின்மூவரைத்தந்து
பொங்குசீர்த்தருமன்முதற்புங்கவர்க்களித்தான். (உஎ)

வேறு.

பின்னருமாங்கவனிரலைமுன்னென்பான்மூவர்தமைப்பெரிதுநல்கி
மன்னுநிசாகரனையெழின்மன்றலயர்வித்திவரைமரபினுளும்
இன்னலந்துய்த்திடுகென்னவவனிரலைநாளினையேய்ந்தநாளும்
நன்னலந்துய்த்திடப்பொருதேனையோர்தந்தாதைகளினத்தாட்கீழ். (உஅ)

சென்றுதொழுதெந்தாயம்புலிமானந்தனையலாற்சிந்தைநாடா [மென்
தென்றுமெமைவருத்தியநீர்மையையுணர்ந்தும்முறையுணர்த்தவெய்தினோ
றன்னமடவாருரைப்பவவன்றருவித்தறிந்தனனவ்வகத்தினின்னை
யுன்னினன்சாலவுமஃதின்றேயொழிந்ததெனச்சினந்திட்டுரைப்பதானான். ()
பேரழகுபடைத்தனமென்றிறுமாந்துநின்றனையாற்பேதாயென்னை
யாரெனநின்னுளத்துன்னியென்மொழியைக்கடந்தனையாலின்றுதொட்டுன்
ஈரிரண்டினுண்மையாங்கலைகள்குறைந்தின்னலினாலேங்குகென்றே
ஆரமுதகிரணனைத்தானோக்கிநெடுஞ்சாபநணியறைவதானான். (௩0)
என்னருமைமக்களையோரத்தொழுக்கினெழுகிழுகினையாலிருநீர்சூழ்ந்த
நன்னிலமேனின்னழகிற்கேதுவாங்கலைகுறையநாளுமென்றே
அன்னநெடுஞ்சாபம்பின்விளைவுநோக்காதளித்தானாலோனேற்றுத்
தன்னரியகலைகுறுகியோர்கலையாயயனுலகந்தானுற்றானால். (௩க)
தனக்கந்தச்சிறுவிதிதந்தமையுணர்த்தவுணர்ந்ததாமரையோனீசென்
றெனைத்துயிருக்குயிராமப்பரம்பரனையேத்திவழிபடுகவென்ன

உனற்கருஞ்சீர்வடகயிலைமால்வரையுற்றும்பராபரனுமைச்சென்றேத்
சினத்தொருமூவெயிலெரித்தசேவகனுங்கருணையினாற்செப்புமன்றே. (௧௨)

எம்மருளானிற்றைமுதனின்றநீர்மையையெய்தியிலகிடன்றேன்
வெம்மைமிகுஞ்சாபமொழிகுன்றுமேபின்னீர்மைமேவிடென்று
சொம்மைமுலைக்குவட்டொருபாற்றுறுத்தனருளியசீர்மைகுறித்திட்டாமோ
ணிம்மையெனைவிசாபந்துடைக்கவெனவென்றேம்பலினோடியம்புமன்றே. ()

கலைபுனைந்தநீர்மையினாற்கலைமதியஞ்சூடியெனக்கடல்சூழ்ஞாலம்
சொலவெனக்கோர்வரந்தருதியெனவிறைவனன்னவண்மேதோன்றலெனைக்
கலைபரவக்கடவதன்னணமென்னவாமேலாமுங்கனிவினெய்த
பொலமலர்த்தாட்சரண்பணிந்துநன்கதியையேநாடிப்போந்தானன்றே. ()

வேறு.

இன்னவாறிவணிகழ்ந்துழியிருவருமொழிந்த
கன்னிமாரெலாங்கணவனைத்தாம்புரிந்திட்ட
இன்னலுக்குளைந்துநைந்தெண்ணினைந்தீண்டின்
றென்னியற்றினேமென்னநின்றேய்ந்துவாணிசைந்தார். (௧௫)

கற்பிலக்கணமாவதுகணவன்றன்வழியே
நிற்பதன்றிமற்றெவன்கொலாநெடியவன்சாபம்
பொற்புநீடவனுருவினையலைக்கவும்புரிந்தாம்
அற்பவன்புடையுடையமோநாமனுத்தனையும். (௧௬)

காதலன்மனம்வருந்துமோர்காரியம்புரிந்தாற்
பேதுறும்பிரவுரவமுன்னிரயமேபெரிது
மேதினிக்கணேயெய்துவாரெனவிளம்பிநூல்
ஆதலாற்புரிதீவினைக்கவதியுமின்றால். (௧௭)

கண்ணிழந்தபிற்கதிரவன்பூசனைபுரிவார்
மண்ணின்மேலிலராதலான்மலையவன்பயந்த
பெண்ணருங்கலமாமுமைபிரசமாமலர்த்தாள்
நண்ணியேத்திடக்கழியுமிந்நலிதுயரென்றே. (௧௮)

மாலதீவனமடைந்துமைமலரடிபழிச்சிச்
சாலவேகினரவ்வழிச்சகமித்தனைச்சு
மூலமாயினேனென்றவரொடுவடமுலைச்
கோலநீடியபதிவயிற்குறுகினதம்மா. (௧௯)

வேறு.

ஒன்பான்மூவருலகுடையானையுளநாடி
அன்பான்வழிபாடாற்றிடவன்னோர்க்கருள்செய்வாள்

முன்பாய்நின்றவுமையைக்கண்டார்மொழிவாரால்
அன்பேயோவவந்தாயென்றேதுதிசெய்வார். (௪௰)

கொண்டானுக்கேயின்னலிழைத்தோங்கொடியேயிங்
செண்டானில்லாத்தீவினைசெய்தாளிடனுற்றேம்
கண்டாரில்லையெம்போற்பாவக்கனென்றே
விண்டாரன்றேயன்னையருஞ்சீர்மிகவுன்னி. (௪௧)

வேறு.

பொன்னேகருணைப்புயலேயொருமுப்புரையெனும்பேர்
மின்னேமெய்ஞ்ஞானவிளக்கேநின்றடிவிரைமலர்தூய்
என்னேகொடுந்துயரின்றகற்றுயென்றிறைஞ்சவுநீ
கொன்னேயிருந்தனைமுல்லைக்கொடியிடைக்கோமளமே. (௪௨)

பூவேயப்பூவின்மணமேமெய்ஞ்ஞானப்புனிதமலர்க்
காவேகமலையும்வெண்டாமரையுறைகன்னிகையும்
ஏவேபொரும்விழியாக்கொண்டனைமுல்லையென்னுநகர்க்
கோவேமனமகிழும்பூங்கொடியிடைக்கோமளமே. (௪௩)

மானேமடவனமேபலமாமறையும்வழுத்தும்
தேனேயிலகும்பசுங்கழையேதீவினைதெறுப்பாய்
வானேவளிமுதலாம்பூதமாகவயங்குமுல்லைக்
கோனேமகிழும்பணையேகொடியிடைக்கோமளமே. (௪௪)

மாமாதவனெனச்சொல்வர்கண்டாயம்மணிநிறத்துப்
பூமாதுதன்கொழுநன்றனின்முன்வரும்பொற்பதனாற்
காமாரியோர்முப்புராரிவலாரிகணிந்துதொழும்
கோமான்வலத்தமர்ந்தோங்குங்கொடியிடைக்கோமளமே. (௪௫)

வண்டோங்குகைத்தலமானையிரந்துன்மகிழ்நனன்று
விண்டாழ்புகழ்சாலியற்பகையாரிடமேவினனீ
கண்டேனுமொன்றுங்கழறிலைமுல்லையிற்கண்ணனைவேக்
கொண்டோங்கியவிளங்கிள்ளாய்கொடியிடைக்கோமளமே. (௪௬)

நந்தாமணிமாசிலாமணிதன்னைநயந்துவலம்
அந்தாரணியிற்கொளுமனமேநின்னடிமலர்ச்சீர்
சிந்தாகுலந்தெறுமென்பதுணர்ந்தேன்றிருமுல்லைவாழ்
கொந்தார்குழற்செங்கரும்பேகொடியிடைக்கோமளமே. (௪௭)

ஐயானனத்தெம்பிரான்மாசிலாமணியன்பினுளம்
வையாவெழுதருமோவியமேநின்மலர்க்கணருள்
செய்யாயெனினெப்படிபிழைப்பேஞ்சிறியேமுல்லைவாழ்
கொய்யாமலரனமேபூங்கொடியிடைக்கோமளமே. (௪௮)

ஆலமடங்குங்களத்தனெம்மானருளாளனன்பர்
சீலமறிந்துதவும்வடமுல்லைத்திருநகரான்
பாலமருந்தெய்வவாரமுதேநின்பரங்கருணைக்
கோலமிறைஞ்சவருள்வாய்கொடியிடைக்கோமளமே (சகூ)

போதயனேத்துங்கருணைகரிநின்புனிதமலர்ப்
பாதபதுமந்தனைநாடிநிற்கும்பரிசினருக்
காதரநல்கினைமுல்லையினெய்தமெய்யன்பினொடெங்
கோதறுத்தாண்டருள்கண்டாய்கொடியிடைக்கோமளமே. (ருo)

மங்கலவல்லிநினைமகவாகவிம்மாநிலத்திற்
செங்கயற்கட்காஞ்சனமாலைசெய்தவஞ்செய்தவரார்
இங்கெளியேந்துயர்தீர்த்திடன்னேயெழிலாருமுல்லைக்
கொங்கவிழ்பூங்குழற்கொம்பேகொடியிடைக்கோமளமே. (ருக)

வேறு.

என்றேதொழுவார்தமைநாடியிமயவல்லி
நின்றேபுகலுமிவணீரெமைநேடிவந்து
பொன்றாதபாவப்புணர்ப்போவப்புரிந்துநின்ற
நன்றாயதோர்பூசனைக்கிங்குநயந்துமாதோ. (ருஉ)

வந்தெய்தினுமித்தலத்தேமகிழ்வாகயாருஞ்
சிந்தைத்துயர்தீர்தரவொண்மலர்செங்கரங்கொண்
டந்தில்வடமுல்லையெம்மானருச்சனையுஞற்றி
னந்தப்பெருவிண்ணவராவதருமையன்றே. (ருங)

எம்மானைநுங்காதலன்முன்னைஞான்றெய்திநின்று
செம்மாமலர்கொண்டருச்சித்திவண்சிந்திநின்றான்
அம்மாதவனல்கியசாபமுமாங்கவன்றன்
மைம்மாண்குழலாட்புணர்பாவமுமாயவன்றே. (ருச)

மடவீரினிநீவிருமம்மதிவாழ்க்கையெய்தக்
கடவீரவனோடுபல்போகக்கடலழுந்தி
விடுவீர்சில்போதுபின்னம்பதமேவுவீரென்
றுடையாளுரைத்திட்டெழிலாருமுருக்கரந்தாள். (ருரு)

அம்மாதருமம்மதிவாழ்க்கையடைந்துமேவிச்
செம்மாந்தவன்றனலனெய்திச்சிறந்துவாழ்ந்து
மெய்ம்மாசுநீக்கும்வியனீற்றினின்புறீஇப்பின்
எம்மான்வலமேவியவன்னையையெய்தினாரே. (ருசு)

வேறு.

மங்கையைவழிபடூஇமாணுடுக்கணுஞ்
செங்கையின்மலர்கொடுசிந்தித்தேத்திட
அங்கவர்தீவினையகன்றதீதுமேற்
செங்கதிர்துயர்கெடல்செப்புவாமரோ. (௫௭)

அசுவனிமுதலியோர் வழிபடுபடல முற்றிற்று.

---

# கதிரவன்றுயர்நீங்குபடலம்.

அந்தணீர்கமலாசனன்வயின்வருமசட்டுச்
சிந்தைமேவியதக்கன்றன்சீற்றத்தினிடுமவ்
வெந்திறற்கொடுஞ்சாபத்தான்வெண்மதிகலைக
ளந்தில்யாவுமேகுறைதரவருங்கியுள்ளயர்ந்து. (௧)

மாதொர்பாகனைவடமுல்லைமாநகரணைந்து
மாதவஞ்செய்துவரம்பறுகலைகண்முன்னிரம்பக்
கோதிலாவரம்பெற்றமைகூறிடக்கேட்டப்
போதுமெய்த்தவப்புலகனையெதிர்ந்திடப்புலகன். (௨)

பிறந்திறந்துழல்பெற்றிமையுடைப்பிறவமரர்
மறந்தவாதநின்றுணையைமறுக்கிலரெனைத்து
மறந்தவாதமெய்ச்சிந்தையராகத்தவிசமரும்
விறந்தவீசனேநின்வழிப்படருவோன்விளம்பின். (௩)

அறுதிமாமலமுத்தனையனகனையவல
மறுதிக்கெட்டொணுமாண்பனைமம்மர்நீத்தென்று
பெறுதியாவெனும்பளகறுமெய்த்தவரிதயந்
தறுதுபீடமாக்கொண்டசங்கரன்றனைச்சிவனை. (௪)

என்னினைந்திவணேழுமையாலியம்பினையால்
என்னமற்றவனொருவகையெய்தியசீற்றந்
தன்னைநீத்தருந்தவத்தினுற்றன்வயிற்றோன்று
மன்னைதன்னையன்றரற்கயர்வித்தனன்மன்றல். (௫)

அப்பெருந்தகையவனிசைவின்றியம்பிகையோ
டற்புதத்திருவுருக்காத்தலுமவனொருகாற்
பொற்புநீடியகயிலைமால்வரைபுகுந்தனனக்
கப்பிரானவன்மாதுலனெனக்கருதாமே. (௬)

நின்றநீர்மையைநெஞ்சிடைக்குறைவெனநினைந்து
கன்றுநெஞ்சனுப்பக்கடுந்தொழின்மேவியதக்கன்
சென்றுதீயனகடுமொழிசெப்பிடத்திருமி
நன்றுநன்றெனுத்தன்னொருநகரணைந்தனனால். (எ)

அங்கணெய்தியதக்கனுமருமறையனைத்து
மெங்களீசன்மாமகந்தனக்கிறையெனவியம்ப
இங்குளந்தனிற்கருதிடான்மகமியற்றிடுவான்
பங்கயாதனன்முதற்பலவமரரைவிளித்தான். (அ)

விளித்தவானவரவன்வியனுணையினமைந்து
களித்தவன்செயுமகந்தனிற்புகுந்துகாபாலி
சுளிக்குநீர்மையையுணர்கிலராய்த்தொடுகடற்பார்
அளிக்குமாயனைமுதன்மையாக்கொண்டவணிருந்தார். (கூ)

தக்கன்மாமகந்தனையவண்குயிற்றிடுமேல்வை
பொக்கமில்லதோர்மெய்த்தவப்புங்கவன்றதீசி
மிக்கவன்பினினெய்திமற்றவன்விபரீதம்
தொக்கநெஞ்சினைமாற்றுவான்றுணிந்துரைக்கின்றன். (க0)

வேதநாயகன்வேள்வியினாயகன்விமல
போதநாயகன்புரந்தரன்பூங்கமலத்து
மாதுநாயகன்மலரவன்முதலினோர்வழுத்து
மாதிநாயகனரனெனவறிகிலாய்பேதாய். (கக)

பிரணவப்பொருளரியெனப்பிரசமாமலர்மே
லொருவனேயெனவுரைப்பவருளத்தழுக்கறுப்ப
மருமலர்க்கொன்றைமாணிடமேந்தியேபரமென்
றுரைசெய்கிற்குமப்பொருளனுத்துணையுமோர்கிலையால். (கஉ)

மகந்தனக்கிறைமறைமுதல்யோகியேயெனச்
சகந்தனக்கருமறையெடுத்துரைசெயுந்தன்மை
உகந்துநீயுணராதுமம்மரினுழன்றனையால்
இகந்துநின்றனையாவுமாமிறைவனையென்னே (கங)

அவிதனக்குரியானரனல்லதிங்கெவரே
புவிதனக்கிறையெனப்படுமாணின்றன்பொருவில்
செவிதனக்குரைப்பாரெவர்திறம்புதலின்றிக்
கவிதனைக்கொடுபொருதவற்கடவுளாத்துணிந்தாய். (கச)

வேதநீதிகளின்னனமிகவெடுத்தியம்ப
மாதவத்ததீசியைத்தக்கன்மரபுளிநோக்கிப்

போதவீண்டுனையழைத்ததியான்புரிதராநிற்கும்
ஓதுமாமகங்காண்டலுக்கன்றிவேறுளதோ. (௧௫)

எனக்குநீதிகள்புகல்வதற்கன்றெழுமையுநின்
றனக்குமெய்ப்பொருளெனக்கொடுவழிபடத்தக்கான்
மனக்கொவ்வாவெற்புமாலைதான்வனைவனேமறைசொல்
தனிப்பரம்பொருளாவனேசாற்றெனப்பின்னும். (௧௬)

வெந்தநீறுசண்ணிப்பனேவிழைந்துயிரனைத்துஞ்
சிந்தையேங்கிடக்கொலைத்தொழில்செய்வனேசெறுத்து
வெந்திறற்கொடுங்கரிமுதல்விலங்கினமுரித்துச்
சந்தமாருடையாக்கொள்வனேநின்றன்குருணு. (௧௭)

விடையுகைப்பனேமெல்லியலொருத்தியைக்காவிற்
சடைதரிப்பனேசங்கரிதனைநனிவிழைந்தோர்
புடைசெறிப்பனேபுலவர்கள்வெறுத்தநஞ்சமுதா
அடையக்கொள்வனேநீமுதலெனப்படுமன்னோன். (௧௮)

இனையநிந்தைகளனைப்பலவெடுத்துநின்றியம்பத்
தனைநிகர்த்திடாக்கொடியவெந்தக்கனைத்ததீசி
முனிவன்புன்முறுவலித்தவன்மொழிதடைக்கெல்லாங்
கனிவினன்விடைநிறுவினன்கற்றவரேற்ப. (௧௯)

கொடியமூர்க்கனுமுதலையுங்கொண்டதுவிடாவென்
றொடிவில்சீர்ப்பெரியாருரைக்கிணங்கவவ்வுரவோன்
நொடிதருஞ்சொலைக்கேட்டவனின்றுநொய்யோன்றன்
மடமைநோக்கியேமாதவன்கட்டுரைத்திடுமால். (௨0)

எங்களீசனையிமையவர்பிரான்றனையிகழ்ந்தாய்
பங்கமெய்தினையாற்கொடியாய்பரிந்தாற்றுந்
துங்கவேள்வியுந்தொலையுமென்றுரைத்தவண்சூழ்ந்த
சங்கபாணியாமுதற்பலதேவரைத்தகைந்து. (௨௧)

புண்ணியம்புரிந்திமையவராயினீர்புரைதீர்
எண்ணில்செல்வமதெய்தினிரிமையவில்வாங்கிக்
கண்ணின்முப்புரங்சட்டழித்திட்டகாபாலி
வண்ணமாமலர்ச்சேவடிவழுத்தியதிறத்தான். (௨௨)

அன்னநீர்மையைமறந்தனிரம்பிகாபதிசேர்
தன்னமாகவேமதித்தனிர்சழக்குறுசெல்வங்
கொன்னையேகுதல்கண்டிலிர்கொடியவிவ்வேள்வி
தன்னைநீங்கிடினுய்விரென்றருந்தவன்றணந்தான். (௨௩)

இருதலைக்கொள்ளியிடையெறும்பொத்திமையோரு
மொருதலைத்துணியாதவனுணையினுள்ளம்
பெரிதலைப்பவேங்கின்றனர்பெரும்பதமிழப்பான்
வருதலைத்துணியாதிதுசெயமனங்கொண்டான். (உச)

மாயவன்றனையரும்பரத்தொருவனுமதித்துப்
பாயசீர்மகமாற்றினன்வேணியிற்பாணி
மேயவித்தகன்விலங்கலைவிரைந்தடுத்தண்மி
நாயனூர்தமக்குரைத்தனனுரைதனம்மா. (உரு)

சொன்னவாசகங்கேட்டவத்தொலைவில்சீர்த்தொல்லோன்
தன்னுளத்தடைத்தவற்குறுந்தண்டமேவிதிப்பான்
உன்னியங்குடல்வியர்ப்புறநின்றனனுவன்பால்
மன்னுசீற்றமோர்படிவெனவீரன்வந்துதித்தான். (உசா)

அவனையற்பொடுமாதரவானணிநோக்கித்
தவறுஞற்றிடுந்தக்கன்மாமகந்தனிற்போந்திட்
டெவமுறச்செயவேண்டுமென்றியம்பினனின்னே
புவனிமேலெனப்போர்விடையூர்தியாம்புராரி. (உஎ)

வேறு.

விமலைதன்கூறெனவிளங்குங்காளியோ
டமர்செயவீரனுமடைந்துதக்கனுக்
குமையொருபாகனூர்சீர்த்தியோதினன்
அமைவினுற்கேட்டிலாதகந்தைகொண்டனன். (உஅ)

இந்திரன்குயிலுருக்கொண்டிரிந்தனன்
சந்திரன்காலினுற்றளர்ச்சியெய்தினன்
நந்துடையான்கடனடுவொளித்தனன்
அந்திலப்பகனுங்கண்ணழிந்திட்டானரோ. (உகூ)

கந்தரங்கறுத்தநங்கடவுண்மைந்தனும்
அந்தரர்யாரையுமழித்துநீக்கியே
முந்துறுகாலவெந்தீயின்மும்மையான்
சிந்தையினவன்செயல்செப்பற்பாலதோ. (௩0)

தக்கனையெச்சனைத்தலைதடிந்தனன்
புக்குழிப்புக்குழிப்புலானிணக்கடல்
மிக்கவிணிருந்திடவேள்விமாற்றினன்
அக்கணத்தடைந்தனனயனுமென்பவே. (௩க)

வீரனையடைந்தவன் விரைமலர்ப்பதம்
ஏரணிமலரினானிறைஞ்சியேத்தியே
யாருனைப்பொருவுகிற்பாரிம்மாட்சியால்
தாரணிவயிற்றக்கன் றன்னைக்காத்தியால். (௯௨)

என்றயன்வழிபடற்கிரங்கியெம்பிரான்
அன்றவன்றலைதனக்கருட்டின்வன்றலை
ஒன்றிடநிறீஇயவனொல்லைநீங்கினன்
மன்றலந்தாரினான்மரபினென்பவே. (௯௩)

சிந்தையுமொழியுஞ்சென்றெய்தரும்பிரான்
அந்தமிலின்பவீடானகயிலைவெற்
பந்திலன்னவனருணிலையடைந்தனன்
கந்தரநீலமார்கடவுண்மைந்தனே. (௯௪)

கண்ணிழந்தலமரும்பகனுங்கண்ணுதல்
புண்ணியமலர்க்கழல்பொருந்துமுள்ளமே
நண்ணியததீசிமுன்னாட்டுங்கட்டுரை
எண்ணிடின்முற்செயுமிருந்தவத்தினால். (௯௫)

கருணைமாமதிபுனைதாணுநிந்தையாஞ்
சிரவணவினையினைச்சிக்கென்றெய்தினேன்
ஒருகழுவாயிதற்குதவவேண்டுவ
துரியதேயெனத்தனதுள்ளத்துன்னினான். (௯௬)

வேறு.

கைத்தலத்தெழில்வளைபுனைகார்த்திகைமுதலாம்
உத்தமப்பெரும்பெண்டிராமுடுக்கணத்தவரும்
அத்திரிக்கனசூயைபாற்றோன்றுமாலோனுஞ்
சித்தியெய்தினர்முல்லையைத்தொழுதெழுஞ்சிறப்பான். (௯௭)

மடங்கெடுத்துயர்நெஞ்சினாற்பகன்வடமுல்லை
இடந்தனிற்சென்றுகண்டிரும்பிறந்தைவேரறுப்பான்
குடங்கையிற்கனியெனத்தனைக்குறித்தருள்சித்தித்
தடங்குடைந்தொருபாசுபதேசனைத்தாழ்ந்து. (௯௮)

சித்திரமத்தியநாயகிதனைச்சிந்தனைசெய்திட்
டத்தலந்தனையிடைவிடாதணுகிநின்றேத்த
மத்தமாமதிசூடியமஞ்சனுமுமையோ
டுய்த்துவெள்விடைமற்றவற்கூயுரைசெயுமால். (௯௯

நீசெய்பூசனைக்குளமகிழ்வுற்றனநின்று
பாசவேரறுத்தாண்டனம்பரிவொடுநம்மை
ஆசிகந்திவண்வழிபடுந்திறத்தினனருக்கர்க்
கீசனுதிநின்பெரும்பவமிரிந்தனவின்றே. (சo)

அஞ்சலஞ்சனின்பதந்தனையுடைந்துநின்றடைவே
எஞ்சலின்றியீண்டிராப்பகலிகந்துநின்றொழில்செய்
தஞ்சுபூசுமுழுகும்பொழுதமலநல்வீடு
மஞ்சநீபெறுவாயெனமகிழ்விறேடுரைத்தான். (சக)

பகனுமாபதிதோன்றிநின்றுரைத்தமைபார்த்துப்
பகரொணுதோரானந்தப்பரவையிற்படிந்து
நகமடக்கொடியொடுமொருநம்பியுமெய்தச்
சகமிசைத்தமியேன்செய்ததவமென்கொலென்று. (சஉ)

வேறு.

பூதரவில்லாய்பூமகனுதன்புணர்கிற்கு
நீதநிலாவாழ்சேகரநின்னேடுநர்நெஞ்சப்
போதுறைகிற்பாய்போதனபாதாபுலையேனு
ராதரவில்லேனென்றெளிவந்தாயருளென்னே. (சங)

கஞ்சனுமாலுங்காணருமோர்சிற்கனமன்றி
னஞ்சனகண்ணுளிஞ்சுனைநாடநடஞ்செய்வாய்
வஞ்சவெளிக்கண்மேயினைநீயுண்மகிழ்வெய்தி
யஞ்சலையென்றேயிங்கெளிவந்தாயருளென்னே. (சச)

மாண்டுபிறந்திங்கேயுழலாமைமனநாசம்
ஈண்டுறநீயீண்டினையினிதெந்தாயெவருன்னைக்
காண்டகுபேறெய்துவர்மணிகண்டாசலநாடு
மாண்டகைநீமேயினையெளிதுன்றனருளென்னே. (சரு)

உம்பருநாடியோர்வரியாயுன்றனையென்று
மன்பினினுடனன்றருள்செய்வாயடியேனுன்
செம்பதுமத்தாளல்லதுதுணையுஞ்சிறிதோரேன்
அம்பிகைபோடுநீயெளிவந்தாயருளென்னே. (சசு)

வேறு.

என்றுதோத்திரம்புகன்றிடும்பகன்றனக்கெம்மான்
அன்றுநல்லருள்புரிந்தபினகிலமீன்றுடைய
துன்றுமாமலர்க்குழலொடுதொல்விடையூர்ந்து
நின்றகன்னுருக்கரந்தனனெறிமையினம்மா. (சஎ)

முன்னரிப்பதிவயினமுதாகரன்முராரி
தன்னமும்முணராப்பெருந்தகைதனைநாடிப்
பொன்னவாமலர்த்தடந்தொட்டவாறுபோற்புரிவி
னின்னறீர்தரத்தன்பெயராற்றடமெடுத்தான். (சஅ)

எம்பிரான்கழலைத்திநின்றெந்தைதன்விடைபெற்
றும்பரெய்தியாங்கோதுறுமருக்கரினோங்கித்
தம்பிரான்முல்லைத்தடம்பதிதனையுளமறவா
தன்பினோங்கினான்பகனெனுமருக்கனுமடைவே. (சகூ)

அன்பினாற்பகலோன்செயும்பூசனையறைந்தாம்
என்பொலாமணிதனையெழிற்காகுத்தனீன்ற
மன்பெருஞ்சுதர்மாண்பினாலருச்சனைபுரிந்த
வன்புநீடியகாதையையறிந்தவாவகுப்பாம். (ருo)

கதிரவன்றுயர்நீங்குபடலமுற்றிற்று.

# குசலவர் பூசனைப்படலம்.

கார்நாடும்பைம்பொழில்கள்கலைநாடும்பல்கழகம்
தார்நாடுஞ்சுரும்பினங்கடமைநாடுமதர்விழிகள்
ஏர்நாடுமணிநாளுமினனாடுமெஞ்ஞான்றும்
நீர்நாடுதனைநிகரா நிலவியகோசலநாடு. (க)

தகரமணங்கெழுமைம்பாற்றகையணங்களாரென்றும்
புகரின்மலர்க்கற்பதனைப்புரக்குநீர்மையினிலவி
அகரமெழுத்தனைத்துமுதலாயவாறெனமரபின்
நகரமேழினுஞ்சிறந்துநலனுறுமயோத்திநகர். (உ)

பொன்பூத்தமணிமாடம்பொலிதருமந்நகர்ப்பெருமான்
கொன்பூத்தநெட்டிலைவேற்குலவேந்தர்தம்பெருமான்
தென்பூத்தசில்லியந்தேர்தசாதிசையுஞ்செலுநீர்மை
மன்பூத்தகாரணத்தான்மருவியபேர்வனைந்துடையான். (ங)

காண்டகுநல்வனைப்பெய்துங்காரிகையாரொருமூவர்
மாண்புடைமாமனைவாழ்க்கைத்துணைவியராகவுமவர்பால்
ஆண்டகைதானோர்மகப்பேறிலனாகவருந்தவமே
பூண்டவசிட்டனைக்கொண்டேபுந்திதெருண்டிதுபுரிவான். (ச)

உரோமபதனுவந்தளிக்குமொருமடமாக்கொடிமணந்த
தராதலமேதுதிக்குமருந்தவராசசிகாமணியாம்
பராவருஞ்சீர்க்கலைக்கோட்டுமாமுனிவன்பதியெய்த
விராவருநண்பானவனைவேண்டியேவிழைந்திரந்தான். (௫)

அவ்வேந்தன்முனிவனொடுமணங்கனையாளொடுமணையத்
தெவ்வேந்தர்பகைதுமிக்குந்திறல்வேந்தர்பெருமான்வாழ்
எவ்வேந்தர்திறைகள்கொணர்ந்தெய்துநகர்க்கெதிர்கொண்டான்
அவ்வானத்தவரெல்லாமலர்மாரிமிகச்சொரிய. (௬)

அம்முனிவன்றனைநோக்கியருட்கடலேநின்னருளாற்
றெம்மடங்கவெவ்வுலகுந்திறத்திறைஞ்சினனெற்பின்
அம்மடங்கிவ்வுலகோம்புமரும்புதல்வற்பெறினென்போ
லெம்மடங்கின்புடையாருமிலைசாதமிதுவென்றான். (௭)

அம்மொழியவ்வேந்தர்பிரானடைவிளைத்திடக்கேட்டு
மெய்ம்மொழியாமெனத்துணிந்தவேதியர்தம்பெருமானும்
மும்மையுலகும்புரக்குமுதுக்குறைவினொருமகவை
நன்மகத்தின்வழிதருவானாமொழிதியெனப்புகன்றான். (௮)

அப்பரிசேமகப்பேற்றுக்கானமகந்தனைக்குயிற்ற
ஒப்பறுசீர்ச்சுவணமயத்தொருகட்டிமேலார்பூதம்
அப்புடையேவானடிசிலதுதலைமேற்கொண்டெய்த
மைப்படியுமணிமாடத்தயோத்தியர்கோன்மனமகிழ்ந்தான். (௯)

அன்னமன்னனைநோக்கியார்வத்தானருந்தவனும்
இன்னடிசினின்னில்லக்குரியவர்தாமேமிசைக
ஒன்னலர்தாழ்மணிமுடியாயுவர்மதலைபயப்பாரால்
என்றின்னறெறவவனுக்கெடுத்தோதிநிறுவினனே. (௧௦)

அவ்வண்ணமரையர்பிரானுங்கவர்மூவருக்கன்பாய்ச்
செவ்வண்ணம்புரிந்தளிப்பச்செங்கைவளக்கோசலையு
பைவண்ணப்பூணணிகைகயன்பயந்தபாவையுமம்
மைவண்ணக்கோதைசுமித்திரையுமரபினினயின்றார். (௧௧)

மூவருக்குநாற்கூறுமுறையினளித்திடவயிலத்
தேவருக்குமுனிவருக்குந்திரைகடல்சூழ்நிலவரைப்பில்
ஏவருக்குமிரும்பகையாமிராவணனைவெலத்தோன்றும்
நாவிருக்குமறைப்பொருளாநம்பியைக்கோசலைபயந்தாள். (௧௨)

பரிதிதனைத்தன்னுருவாப்பரித்தானைப்பாம்பணையான்
கருதலரைச்செகுத்தானைக்கரமலர்நின்றகலானை
அரிதிருவமனையானையமலன்றனுணையென
வருமொருவன்றனையன்பாய்க்கைகேசிவழங்கினளால். (௧௩)

சென்றாலோரெழிற்குடையாய்ச்செறிந்திருப்பவாதனமாய்
நின்றாலோர்பாதுகமாய்நெடும்பரியங்கமதாகிப்
பொன்றானையென்னுள்ளப்புண்டரிகமேயானை
நன்றாருமனத்திளையநங்கையவளும்பயந்தாள். (௧௪)

பஞ்சசனனெனுமரக்கன்படிவமாய்க்கடலகத்தே
செஞ்செவேகிடந்திறைவன்றிருக்கரமேபொலிந்தானை
அஞ்சுவணநிறத்தானையவன்வென்றிவயிற்குறிக்கு
மஞ்சனையும்பயந்தனளம்மடவரலன்பினினம்மா. (௧௫)

வேறு.

மைந்தர்நால்வருமரபினிற்றோன்றிடமன்னன்
அந்தவானமிழ்தயின்றனனெனவகங்குழைந்து
சந்தமாமலர்ச்சரயுநீர்படிந்துதாழ்வறுசீர்
அந்தணாளருக்கரும்பொருள்வித்தினொடளித்தான். (௧௬)

எமக்குமெம்மையேபொருமெழின்முனிவரராவார்
தமக்கும்வானவர்தமக்குமேம்படுமுளத்தக்கான்
உமக்குமேயலதெவர்க்குமேயுவப்புறுநலத்தான்
இமைக்குங்கண்ணிவற்கிராமனென்றிடுபெயரென்றான். (௧௭)

ஏகவானரசிமையவரிறையிளவலொடும்
போகநீள்சுரம்புண்ணியம்பூத்ததேபோலும்
மாகமேவழுத்தொருவனின்னலதுமற்றறியேன்
ஆகவென்றலும்பரித்தவற்பரதனென்றழைத்தான். (௧௮)

நிழலெனத்தம்முன்றனைவிடாதொருநெறிநின்று
பழுதில்சீரயோத்தியைவிடுத்தழற்கடம்பருவில்
செழுமலர்க்கரத்தேந்தியேசெல்லுமச்செம்மற்
கழிவில்பேரிலக்குவனெனவமையுமாலென்றான். (௧௯)

அரசிராகவன்பொறுத்தலுமவன்றனைநேர்ந்த
விரவலாரையுந்தன்னகமேவிநின்றொறுத்துப்
பொருதுமோரறுவரையிவணுறுவராய்ப்பொருத
ஒருவனைப்பெயரிடுகசத்துருக்கனென்றென்றான். (௨௰)

இன்னவாறவர்க்கேய்வதோர்நாமமேயிட்டு
மன்னுமாதவவசிட்டனும்வயங்கிரலையின்கோட்
டன்னமெய்த்தவனுந்தமதிருக்கையையணுக
மன்னன்றானுந்தன்மரபுளிக்கருமமாற்றினனால். (௨௧)

வேறு.

நிறைமதிநீரநெடுந்தகைமைந்தர்
தறைசெய்பெருந்தவமென்னவளர்ந்தார்

மறையொருநாலின்வயங்கிடுநீரார்
இறையுமிவண்பிரிவெய்திலர்நின்றார். (உஉ)

மன்னவர்மன்னனன்மதலையரொல்லை
உன்னருமாமறையோதியுணர்ந்து
வின்னெறிமுற்றும்வியப்பவறிந்திட்
டென்னிவரொப்பவரில்லெனநின்றார். (உ௩)

இன்னவரின்னணமெய்தியஞான்று
மன்னன்மருங்குவயங்குசினந்தான்
என்னுமுருக்கொடிணங்கிநடந்தா
லென்னவடைந்தனனேமுறுமாண்பான. (உ௪)

கோசிகமாமுனிகோவினையண்மி
ஆசிகள்கூறியரிந்தமனைத்துந்
தேசறுதாடகைபேமுதலாயோர்
தேசுறுவானிடைசேரவிடுப்பாய். (உ௫)

என்றுயிரேற்றிடுமெண்ணருளில்லா
வன்றிறற்கூற்றெனவந்தவனேற்ப
அன்றவயிற்படைமன்னுயிரற்று
ரென்றுநிலாவியெடுத்திதுசெப்பும். (உ௬)

மாதவகேண்மதிமாதவனீரெட்
டோதுறுமாட்டையனல்லனுவன்றான்
போதனகண்ணன்பொரற்கெழுகென்ற
லேதினிசாசரர்பாலிவணென்னே. (உ௭)

என்றவம்மன்னனியம்பியசொற்கேட்
டொன்றியசீற்றமுளத்திடைபொங்க
நன்றுநின்செய்கைநினன்மகன்மேன்மை
நின்றறிவேனொருநீயறியாயால். (உ௮)

என்னவருந்தவனெய்தியகோபம்
தன்னையுணர்ந்ததனித்தவசிட்டன்
மன்னனைநோக்கிநின்மைந்தனுக்கின்றே
நன்னலமெய்துதனொடிலையென்றான். (உ௯)

அவ்வுரைகேட்டவயிற்படைமன்னன்
தெவ்வடுவேல்வலசேவகனைச்சென்
றவ்வயினொல்லையழைத்திவனைக்கொண்
டெவ்வமுறுங்கொடியாரடுகென்றான். (௩௰)

தம்பியொடுந்தனிமாமறைகூறும்
நம்பியருந்தவனல்லகுறிப்பின்
வெம்புறுகானிடைமேவினன்மேவி
உம்பர்தொழும்பொழிலொன்றினையுற்றான். (ருக)

வேறு

பரவியசித்தாச், சிரமமெனும்பேர்
மருவியசூழல், தெரிதிகொலென்றான். (ருஉ)
இம்மொழிகூறு, மம்முனிவன்முன்
செம்மையிராடகை, யும்மெதிருற்றாள். (ருரு)
நீர்முகிலன்னா, னுரெனலோடும்
சூர்மகளுடிய, போரடுகென்றாள். (ருச)
பகழிவிடுத்தே, தகவினழித்திட்
டுகவையினக்கான், இகலொடடைந்தான். (ருரு)
ஆதிமுதல்வன், காதிசுதற்கூய்
மாதவவேள்வி, நீதுணிகென்றான். (ருசா)
அன்னவனுடி, முன்னுறுமாமக
நன்றுகுயிற்றிட, ஒன்னலருற்றார். (ருஎ)
தம்பியோடெந்தை, அம்பினையேவி
உம்பனைமேவ, வன்புபுரிந்தான். (ருஅ)
அமரரறிந்திட், டமைவினடுங்கோல்
நமதிறைவற்கி, யமர்செயவென்றார். (ருகூ)
நற்றவனல்கப், பொற்றபடைக்கல
முற்றனவெல்லாம், பெற்றனனன்றே. (சூ0)
மாமுனியோடும், சோமகனன்பாற்
சாமருமிதிலை, யேமமொடுற்றான். (சூக)
செல்வழியெம்மான், கல்லிடையேதன்
நல்லபதத்தூள், ஒல்லையினுறவே. (சூஉ)
அகலிகையென்னச், சகமிசைமேவப்
புகலிவராரெற், ககமதுனநந்தே. (சூரு)
என்றவம்மாலுக், கன்றவள்சீரை
நன்றுரைசெய்தா, னென்றியநல்லோன். (சூச)

வேறு

மாமுனியொடுங்குமரர்மாமிதிலைமேவி
நாமருபுகழ்ச்சனகன்மாமனையைநாடிப்
போமறுகினெந்தைபுவிசெய்ததவமென்ன
லாமருமறைக்கொடியையன்பினொடுகண்டான். (சூரு)

நங்கையவளுங்கடலிளுகணையகன்று
செங்கைதனில்வில்லொடுசெறிந்தமுகிறன்னை
அங்களவிலன்பினொடுகண்டனளகன்முன்
எங்கள்மறையோன்பின்வருமெண்ணருகுணத்தான். (௪௬)

சென்றெழில்விதேகநகர்சிக்கெனவடைந்தே
அன்றவன்மகிழ்ந்துசெயுமானவுபசாரம்
நன்றுகொடுநம்பியிவனாரெனநயந்தே
துன்றுமுடியோற்குமுனிசொல்லுமினிதன்றே. (௪௭)

நாடுபுகழ்சாறயரதன்சிறுவர்நால்வர்
ஈடுமெடுப்பில்லவரிவர்க்குமுதலோனத்
தாடகையைவென்றமதுதாழ்வறவுஞற்றிப்
பீடுறுமகத்தொழில்செய்பேருதவிசெய்தான். (௪௮)

மன்னவவிவன்வரவுன்மங்கையைமணப்பான்
தென்னவனெனவுலகமாண்டசிவன்வில்லைத்
தன்னதுகரத்தினிறுப்பனதுதன்னை
முன்னறியெனத்தவனுமுன்மொழிவதானான். (௪௯)

வேறு.

இறுவரம்பினிலெவ்வரும்பழிச்சுறும்
மறுவறுமனுவுருவார்ந்தவளன்முன்
அறுபதினாயிரராசனாணையாற்
செறிதிணித்தோள்கொடோர்சிறையினிட்டனர். (௫௦)

கோமுனிகுறிப்பினாற்கொண்டல்போல்பவன்
மாமலைபொருசிலையயங்குகைத்தலத்
தேமுறத்தொட்டனனிற்றதேயெனின்
யாமவணிகழ்ந்தமையியம்பற்பாலதோ. (௫௧)

அரசனுங்கோமுனியாணையான்மத
கரிவளத்தானையான்கடவுண்மாநகர்
பரிவொடுந்தூதுவரெய்தப்பண்ணினான்
திருமுகங்கைக்கொடுசென்றுசேரவே. (௫௨)

மன்னவர்மன்னனும்வசிட்டமாமுனி
தன்னொடும்புரசனர்தாமுமெய்திடப்
பொன்னனகுணத்தொருவிதேகன்பொன்னகர்
முன்னிவந்தெய்தினன்முதிருமன்பினான். (௫௩)

பங்குனியுத்தரம்படர்ந்தவேலையிற்
செங்கணான்சனகியைத்தீமுன்வேட்டனன்
அங்கவன்கரத்திடையன்பிற்பெய்தனன்
மங்கலமரபினின்வயங்குசீரரோ. (௫௪)

இக்கொடியென்மகளிருந்தவத்துறை
ஒக்கநின்றியற்றுவாளுவளொடொன்றிநீ
அக்கலைமதியுரோகணியெனச்சொலத்
திக்குறுசீரினாய்திகழ்கவென்றனன். (௫௫)

மாதவன்சனகியைமரபின்வேட்டபின்
கோதறுகுணத்தொருவிதேகர்கோன்றரும்
மாதினையூர்மிளையெனுமடந்தையைக்
காதலினிலக்குவன்கடிதயர்ந்தனன். (௫௬)

சனகன்பின்வருகுசத்துவசன்றான்றரும்
பணிமதிமுகத்துமாளவியைப்பைங்கழைக்
கனிமொழியெனுஞ்சுதகீர்த்தியைக்கனிந்
தனகனுக்கிளைவரையடைவின்வேட்டனர். (௫௭)

இன்னணமணமயர்ந்திருந்தவேலையின்
மன்னவர்மன்னனுமிதிலைமன்னன்மாட்
டொன்னலர்தாழயோத்தியினையுற்றிட
நன்னயவிடைபெறீஇநடந்திட்டானரோ. (௫௮)

காதுரங்கத்தொடும்வசிட்டன்றன்னொடும்
சீதைமுன்மருகியர்சேர்ந்தணைந்திடக்
கோதைவிற்குமரனுங்கோதில்கோசலை
ஆதியரெய்திடவகன்றிட்டானரோ. (௫௯)

நடவையிற்கண்டனனவைமிகுந்திடுந்
திடமிகுநிமித்தமதறிந்தசெம்மலும்
மடனிகவுணர்ந்தவர்க்கேட்பமற்றவர்
இடரிலையாகுமாலென்றுகூறினார். (௬௦)

கூறியதுணையினிற்கொடியபேரொலி
பாறணைவாட்கரப்பகீரதன்குலத்
தேறனான்கேட்டிவணெய்திற்றென்னென
மாறடுமழுக்கையான்வந்துற்றானெனா. (௬௧)

உரைத்துழியன்னவனுலகமேங்கிட
விரைத்துழாயலங்கலான்விழிப்புலக்கெதிர்
வரைக்கொடிமருளான்வில்லிறுத்தமாண்பினாற்
றரைத்தலஞ்செருக்கினிற்றலைப்பட்டாயென்றான். (௬௨)

என்றுரைவழங்கியேயீதுமாயவன்
றன்றிணிகரத்துழைச்சாரும்வில்லிதன்
மன்றிறமுணர்தியென்றுரைத்துமாதவன்
வன்றிறல்வில்லவன்வலக்கைநல்கினான். (௬௩)

இராகவனேற்றதற்கிலக்கமாவது
பராவருநலத்தரீபணித்தியென்றலும்
விராவுதன்றவமெலாம்விடுத்துநின்றவன்
நிராமயனென்பதுநிறுத்தியேகினான். (௬௪)

மரபினின்வாங்கியவயங்கும்வில்லினை
வருணன்பாற்சேமியென்றிறைவழங்கியே
கரிபரிமுதலவாந்தானையங்கடல்
விரவிடவயோத்தியைபீட்டுமெய்தினான். (௬௫)

கேகயன்பரதனைக்காணுங்கேண்மையான்
ஒகையிற்றூதரையொல்லையேயினான்
நாகணையவன்றன்பினல்லதம்பியோ
டேகினான்விடைபெறீஇயிரதமூர்ந்தரோ. (௬௬)

தன்னகர்க்காவலைத்தந்திரமனை
மன்னவனுக்கிடமன்னனாவுன்னினான்
அன்னதைக்கூனியோர்ந்தரசிபாலனைத்
தின்னலிங்குறுற்றுதற்கெண்ணினாளரோ. (௬௭)

பூமகள்பொருவுகற்புடையபூவைகேள்
நாமகள்கொழுநனையீன்றநப்பிதான்
வேமகன்கானிடைமேவுநின்மகன்
கோமகனாவரங்கொள்கென்றோதினாள். (௬௮)

தேர்ந்துணர்த்துவவினத்தேவர்கோவினை
யேந்தலைக்கானகமேகுகென்றனள்
ஈர்ந்தகவிழியினாணல்லசீதையும்
ஆந்தகவளித்தனரிகுளைமாரரோ. (௬௯)

இன்னசொற்கேட்டவவ்விலக்குவன்றுல
முன்னவனிராகவன்முன்னர்க்கற்கடற்
தன்னையேநாடியதானணைந்தனன்
அன்னையாஞ்சனகியுமடைவினேகினாள். (௭௦)

கானவிக்கரையணைந்தமலன்றனுமக்
கானவர்கோன்குகன்கலன்விடுப்பவே
வானுலாஞ்சித்திரகூடமால்வரைத்
தேனமர்சோலையைத்தேடியெய்தினான். (௭௧)

தம்பியுமிராமனுஞ்சனகியோடுமவ்
வெம்பியகானகமேவிநின்றமை
பம்புசீர்த்தபரதன்கேட்டபான்மையான்
அம்பரமேகினானகநீக்கரோ. (௭௨)

சுமந்திரன்வசிட்டனே முதலதொன்மையோர்
தமந்திரண்டாலனை தண்மலர்ப்பொழில்
அமைந்தகேகயத்திருநாடணைந்திடச்
சமைந்ததூதுவர்தமைத்தாமும்போக்கினர். (௭௩)

கண்டனர்கேட்டனர்கனகத்தேரின்மேற்
கொண்டனரணைந்தனர்கோவகன்றமை
ஒண்டொடித்தாயினோர்ந்துழுவலன்பினர்
புண்டரீகக்கணீர்பொழியநின்றனர். (௭௪)

தம்முனுந்தம்பியுஞ்சனகியுங்கட
மம்மரபினிலடைந்தமையறிந்தனர்
செம்மலுக்கேய்கடன்செய்துமேவினர்
மைம்மலிபொழிற்சித்திரகூடமால்வரை. (௭௫)

பரதனுமிளவலும்பரிந்தடைந்தமை
வரதனுங்கண்டுமன்னவர்பிரான்புக
ழுருநிறீஇச்சென்றமையொல்லையோர்ந்துதன்
இருகையாற்செய்கடனியாவுஞ்செய்தனன். (௭௬)

இராமனைத்திருநகரெய்துகென்றவற்
பராவிநின்றழைத்திடும்பரதன்றன்னையான்
விராவருகானகமேவிமீள்வளவுற்
றராதலங்காத்தனின்றனக்குரித்தென்றான். (௭௭)

பாதுகமளிப்பவப்பரதன்கைக்கொடு
மேதகுமயோத்தியைமேவலின்றியே
கேதநீத்திடுநந்திக்கிராமமேய்ந்துதன்
தாதைபோல்வானிலதான்கொண்டானரோ. (௭௮)

இவ்வயினிங்கிவணிருப்பவேந்தலும்
கவ்வையிற்கடநெறிகடந்துசென்றவ
னெவ்வயினோரும்வந்திறைஞ்சியேத்துறுஞ்
செவ்வழியோருறைவிடஞ்சென்றேகினான். (௭௯)

அத்திரிபோனெடுமாடயோத்தியான்
மத்திரிதயிரெனமனங்கலங்குறுச்
சித்திரவிற்கையஞ்சேவகன்றவத்
தத்திரிவாழியவடவியேகினான். (௮௦)

அங்கவனுறைவிடமடைந்தசேவகன்
பொங்கியகாதலான்பொருவின்மெய்த்தவ
எங்களுக்கருள்விடையெனவவன்புடை
தங்கனகுயையாந்தாயும்போந்தரோ. (௮௧)

சனகியைவாழ்த்தியத்தையலாள்பெறப்
புனைகலன்றூசுநல்கிடப்புரிந்தவ
டனையினியிறைஞ்சினுடன்றொடேமவில்
அனகனுந்தம்பியுமவணகன்றனர். (அஉ)

விவ்விராவியகுழலவள்வெதும்புறத்
தெவ்விராமனத்தொடுஞ்சேண்டிரிந்தவவ்
வெவ்விராத்தனையிராவகையின்வீட்டினான்
இவ்விராசவனிமையோருமார்ப்பவே. (அங)

தண்டகவனந்தனைத்தகவினெய்தியே
அண்டரும்பரசுமவ்வந்தணார்கள்
கொண்டுசென்றவர்கடங்குறைகள்கூறிடப்
புண்டரீகக்கணான்புரத்துமென்றனன். (அச)

மாதவர்குழலையகன்றமாதவன்
ஓதநீரொருகையிலுண்டமாதவப்
பூதரமனையவன்புரிந்துவைகிய
பாதவம்பொலிபொழில்பையவெய்தினான். (அரு)

அமரர்கள்வழிபடுமமருமாதவன்
குமரநீயனைதருங்கொள்கைசாற்றிட
அமைதருமோவெனாவவனுக்கன்பினான்
அமைவில்பல்படைக்கடலனைத்துநல்கினான் (அசு)

பெற்றபினவண்விடைபெற்றநாயகன்
சற்றுணைநாடியதம்பியோடுமுப்
பற்றிகந்தாருறைகிற்கும்பான்மையாச்
சொற்றபஞ்சவடியாஞ்சூழலெய்தினான். (அஎ)

நடவையிற்சடாயுவைநண்ணியாங்கவன்
கடவதோரன்புபூண்டிலகிக்காகுத்தன்
மடமயில்புடைவரமற்றத்தம்பிசெய்
இடனுடைச்சாலையினிதினெய்தினான். (அஅ)

வேறு.

மாதாவனையார்மருவும்பொழில்வாய்
காதார்படைக்கையனிராவணன்வாழ்
போதாயினபோதலுறும்பரிசே
ஈதாமெனவெய்தினளெண்ணமிலாள். (அகூ)

அனகன்றனைநாடியடைந்திடுசூர்ப்
பனகைப்பெயராள்பரிவேதுமிலாள்
துனியுற்றமனத்தவள்சூர்ப்பிணைபோல்
தனியுற்றெவனுந்தடையின்றடைவாள். (கூ0)

பூவாளியனங்கன்விடப்பொருமி
ஆவாவிவணேதுசெயற்கமைவேன்
காவாயெனவுங்கடிதெய்தினளால்
தேவாதிபனார்செறிசூழலரோ. (கூக)

கண்டாளொருகாமன்விடுங்கணையாற்
புண்டானுறுகின்றதுபோரின்வலாய்
எண்டான்பிறிதில்லையெனாவயர்வாள்
விண்டாள்விளாவாள்விளிமேவுறுவாள். (கூஉ)

பஞ்சேயனபாடுபடும்பரிசாள்
நஞ்சேயனகாமநலித்திடநான்
உய்ஞ்சேனெனதாருயிருய்ஞ்சிலதென்
றஞ்சாதுணைசெய்தலமந்திடுவாள். (கூங)

வேதாவழிவந்தவிழுத்தகையேன்
மேதாவியர்நாடியமெல்லியல்யான்
யாதேயிவணேதுவலென்றுளனஞ்
சோதாதனவோதியுலைந்திடுவாள். (கூச)

பொன்னாடியர்நாணுறுபோதமிலாள்
என்னாதனையெந்தையையெய்தலுமே
அன்னாணிவளானவன்பினொடுஞ்
சொன்னாளவடோன்றியவண்ணமெலாம். (கூரு)

அரசன்றருசேயருமாமறைதேர்
தருமந்தணர்பாவைதனைச்செறிதல்
மரபன்றெனவாய்மொழிதந்தனனத்
திருவொன்றுமுராத்தொருதேவர்பிரான். (கூகூ)

எனநின்றுரையாடியவெல்லையினந்
சனகன்றனையேயகலாதுறைவாள்
தனையன்பொடுகண்டனடாழ்வறுசீர்
புனைவிண்ணவர்முற்புரிநல்வினையான். (கூஎ)

சனகன்றருதையலைமேவலினான்
அனகன்கொடியேனையணைந்திலனால்
எனையிஞ்சுனைசெய்வதெனாவினைவாள்
தனையங்கணகன்றனடானுமரோ. (கூஅ)

நிசியங்கவணீலவிடம்பொருவச்
சசியெய்திடவுந்தளர்வாண்மெலிவாள்
விசுவந்தனைநல்கியவிண்ணவனும்
விசையிற்செலும்வெங்கனனல்கினனே. (கூகூ)

தேன்றால்கொடியாயெனுந்தென்றமிழின்
குன்றேதரவந்தனைசோதரநிற்
கென்றானிவணெய்தியதிக்கொடுமை
நன்றாலெனுநல்லுணர்வோய்ந்திடுவாள். (௧௦௦)

வேறு.

இன்னவளிவ்வாறின்னலினுள்ளத்தினைகின்றாள்
தன்னையளிப்பத்தாமரைநண்பன்றனியாழி
மன்னுநெடுந்தேரூர்ந்தினிதெய்தமகிழ்வுற்றே
கொன்னவில்வேலோன்றன்னுழைவந்தாள்குறைதீர்வாள். (௧௦௧)

வந்தவளிறையற்றந்தனைநாடிமலர்மேவும்
பைந்தொடிதன்னைக்கொண்டகல்வேனென்பதுநண்ணி
அந்திலடைந்தேசூழ்ந்தனண்மற்றவ்வரவங்கண்
டெந்தையைநாடுந்தம்பியடைந்தானினறீர்ப்பான். (௧௦௨)

நேர்ந்தாளிங்குற்றவளோரரக்கிநிலனன்பு
கூர்ந்தேநல்கும்பூங்கொடிதன்னைக்கொடுபோதத்
தேர்ந்தாளென்றேமுலையொடுமூக்குஞ்செறிகாதும்
ஈர்ந்தானென்றுவெழிலியின்மும்மையெடுத்தார்த்தான். (௧௦௩)

வேறு.

அரனார்கயிலைவரையெடுத்தவன்றோவெனுமாலவன்பின்னே
வருநேரிளையோயின்னுநீமருவினாயோதுயிலெனுமால்
கரனேகரந்தாயோவெனுமால்காற்கிந்திரனைத்தளையிட்ட
மருகாவெனுமாலிதுவேநம்மரபிற்கமைந்தபழியெனுமால். (௧௦௪)

ஒருநங்குடிக்கேபழிவிளைத்தானேங்கலனதோள்பார்த்திருப்பப்
பொருதன்னானைவென்றிடநீர்போதந்திலிரோவாவெனுமால்
திருவமனையவொருத்திதனைத்தீண்டவிதுசெய்தானுலைய
வருவிரெனுமாலீதுமக்குமரபோவெனுமாலுறுகுறையான். (௧௦௫)

மும்மைஞாலம்வெருவருமெம்முதல்வாவெனுமாணிற்பின்வருஞ்
செம்மையுலந்ததோவெனுமால்செகமுஞ்சிரிக்குமினியெனுமால்
எம்மையிருகைபிடித்தீர்த்தானிருக்கத்தகுமோவிதியெனுமால்
இம்மைநலிந்தேனனியென்றேயிடரினலமந்துழிதருவாள். (௧௦௬)

என்றுபொருமியழுதிரங்கவிருகைவேழமனையமழுக்
கன்றுபோல்வான்காகுத்தன்கடமைபுரிந்தாங்கெய்தலுமே
நின்றவரக்கிதனைக்கண்டுநெருநல்வர்தீர்நாமேயோ
நன்றுசொலிரிங்கடுத்தகுறைநாடியென்றானைகமுகத்தான். (௧௦௭)

குன்றேயனையபுயத்திரவிகுலத்துமருமான்கட்டுரைப்ப
நன்றேகேட்டப்பணிமொழியாளுடியவற்கேயுரைசெயுமால்
இன்றுதரத்தானுமையடைந்தேற்கீதுசெய்திரேன்செய்கோ
பின்றுனொருவரைமைவிழையாப்பீடுசெய்திரென்றுரைத்தாள். (௧0௮)

அன்னபொழுதாங்கவணிகழ்ந்ததனைத்துமோர்ந்தகாகுத்தன்
மின்னினிடையாயினியீண்டுவிரவல்பொருந்காதென்றவளை
முன்னரகலென்றுரைத்தனனுன்முத்தநகைமான்பொருவும்விழிக்
கன்னன்மொழியாள்கடிதுகரன்கானமருவினளன்றே. (௧0௯)

கானையணைந்துற்றதுகூறக்கடற்சேனையொடங்கவனெய்தி
பொரவும்பூளைவீயென்னப்போகவவனுஞ்சேனையுமே
விரைவினகன்றுகடலிலங்கைமேவிநிகழ்ந்ததுரைசெய்தாள்
இரவிகுலத்தோர்மணிவிளக்குமெய்தினன்சாலையமன்னோ. (௧௧0)

கோடியவரக்கிசானகிதன்கோலமெனைத்தும்விரித்தோத
நெடியகாமக்கடலதனைநீந்தவறியாதலமந்து
கடியசோலைவயினெய்திக்காகுத்தன்கைக்கணைவருத்த
முடியகில்லாதிருந்தானைமொழிந்தான்முகம்பத்துடைக்கொடியோன். (௧௧௧)

வேறு.

மாருகெனக்கட்டுரைசெய்திடவஞ்சநெஞ்சன்
தானுயினுனொர்பொலன்மானெனத்தானவேசன்
ஆனுனொருமாமுனிபாகியணைந்துசென்றான்
கானார்குழன்முன்னடந்தன்றுகனகமானும். (௧௧௨)

கண்டாளொருசானகிகைதவமென்றுகாணுள்
புண்டானெனநெஞ்சுவருந்திப்புகலுகின்றாள்
மண்டான்புரியுந்தவமாமெனுமானைப்பற்றிக்
கொண்டேதருகென்றனள்கோதுபடாநலத்தாள். (௧௧௩)

ஓமென்றவனுமதன்பின்னடந்தோதகமானும்
நாமொன்றுகானமெலாஞ்சென்றதுநம்பிதானும்
தாமஞ்செறிவில்லின்றனிக்கணையானடர்ப்பக்
காமென்றுதம்பிபெயர்கூறிக்கடிதுவீழும். (௧௧௪)

பொல்லாதமாயைபுணர்த்தும்மப்பொருவிலாதான்
சொல்லேயனவெங்கணையாற்றொலைவெய்தவன்றான்
வல்லேயிடும்பொய்க்குரல்கேட்டுமலர்துறந்தாள்
நல்லோயினிராடெனவண்ணலையென்றுநைஞ்சாள். (௧௧௫)

அண்ணற்பெரியோன்றனதாற்றலவனுரைப்பக்
கண்ணுக்கினியானுரமேவியகாதன்மானும்
புண்ணிற்சணையிட்டெனவெம்மொழிபுந்திநைய
எண்ணிப்புகலநடந்தானிளையோனுமன்றே. (௧௧௬)

நடந்தெய்தினனண்ணலைக்கண்டனனுமவேலோன்
மடந்தைக்கினியெய்திடுந்துன்பெனமாண்பினெண்ணிக்
கடந்தெய்தினன்றம்பியொடுங்கடங்காத்திருந்தோன்
படர்ந்தேகிடவந்தனன்வைப்பையப்பாதகத்தோன். (௧௧௭)

வைத்தண்டம்வயிற்றிடைப்பின்னதுவாங்குவானை
முத்தண்டமேந்துமுனிபுங்கவனுபடைந்து
மத்தன்றனகண்ணிருபாலும்வயங்கிநாட
எத்திக்குநடுங்கவுமேங்கவுநின்றதம்மா. (௧௧௮)

பூன்மூக்கிழந்தாளுரைத்திட்டமொழியின்மேம்பட்
டென்மாட்டிறைவைத்தமெய்ப்பண்பெனவிஞ்சுநின்ற
பொன்மானனையாடனைக்கைக்கொடுபோதலேநன்
றென்மாதிரம்வென்றநெடும்புயக்கென்றுவந்தான். (௧௧௯)

சனகன்றருபாவையொடுஞ்சிலசாற்றியன்னாள்
புனவாயினெடும்புலிவாயகப்பட்டபுல்வாய்
எனமாமனநஞ்சிடவெம்பெருமாட்டிவைகுந்
தனியாமிருக்கையொடுங்கிண்டனன்சஞ்சலத்தான். (௧௨௦)

மாபாதகனும்மனையைக்கொடுவானினேகக்
காபாலிதன்கைக்கணையாகியகாமர்வேந்தைப்
பூபாலர்போற்றும்புருடோத்தமனைப்புகன்றுள்
கோபாலனைத்தொடர்ந்தான்புட்குழூஉப்புரப்போன். (௧௨௧)

வந்தானைத்தானவன்கண்டுவயிரவாளால்
அந்தாரணியில்விழச்செய்தனனன்னையோர்ந்தென்
சிந்தாகுலமாவனவில்லிசெவிக்கேற்றுதி
யெந்தாயுனதாவிதணர்ந்திடென்றேங்கிநின்றாள். (௧௨௨)

கோடியானுமங்கணகன்றன்னையைக்கொண்டுசென்று
கடியாரிலங்கைநகரெய்திச்கனகவைப்பாம்
படிமீதெனச்சொற்றிடுஞ்சிஞ்சுபவனநாப்பண்
விடியாச்சிறையிட்டனன்விண்ணவர்நாகர்நைய. (௧௨௩)

ஊழிக்கடுங்காலெனவேவருமும்பலன்றன்
பாழிப்புயமேருதன்பிற்படர்கிற்பநாடி
மாழைக்கிணையாம்விழியாளவனத்திற்காணான்
ஏழைக்கெவனுற்றதென்றேங்கினனியாருமேங்க. (௧௨௪)

கிளியொத்தசொல்லாள்கிடைத்தற்கரிதாகிநைஞ்சான்
வளியொத்துநடந்துவனம்பிறகிட்டோடுதுங்க
அளியொத்தசிந்தைக்கழுகிக்கிறையாகமண்மேல்
விளியொத்துலைவுற்றிருப்பத்தன்விழியிற்கண்டான். (௧௨௫)

கண்டானெழில்வேதமும்போதமுங்காண்கிலாதான்
பண்டாலிலையின்வயிற்றுஞ்சும்பரிசுநீங்கி
மண்டான்செய்தவத்தடிவைத்துநடக்கும்வள்ளல்
எண்டானுரைப்பதிவற்கெய்தியதென்கொலென்றான். (௧௨௬)

பொன்னோக்கியமார்பிறைவந்தமைபோதநாடிக்
கன்னோக்கியதோட்கதிரோன்குலக்காவலோயே
மென்னோக்கியைவாளரக்கன்கொடுபோயினன்றெற்
கென்னோக்குவதென்றவனெற்புடனீத்தகன்றான் (௧௨௭)

தாதைக்குரியகடன்யாவையுந்தான்புரிந்த
போதற்பினிலக்குவன்றேற்றற்புலன்கொடெம்மான்
காதற்சனகிதனைக்கொண்டகல்கள்வனைக்கொன்
றோதப்படுநல்லிசையெய்துவதுண்மையென்றான். (௧௨௮)

என்றோநடந்துசெலுமெல்லையிராகவன்றன்
பொன்றாதநீர்வேட்கையையெய்தப்பொறாதுநின்று
பின்றான்வருவோற்கொடுவாவெனப்பேசவாங்கோர்
மின்றாழ்குழலயோமுகிதானும்விரைந்துவந்தாள். (௧௨௯)

வந்தாளைமூக்குச்செவிவார்முலைவாங்கிநின்றே
கொந்தார்துளவத்தெரியற்குலபூதரன்றாட்
கந்தாமமணிந்தவனங்கருச்சித்துநின்றான்
அந்தாமலையாற்றருமாதியசமகிழ்ந்தான். (௧௩0)

பிற்சென்றனரவ்விருவோரும்பெயர்ந்துகானிற்
கற்சென்றதோளானொருவன்மெய்க்கவந்தனென்பான்
கைச்சென்றணுகுற்றனர்காமருவீரர்வாளான்
அச்சொன்றகன்றானறவோரினகன்றுபோந்தான். (௧௩௧)

போந்தானுரைகொண்டொருபோதப்படிவமன்றுட்
சார்ந்தாரவள்சொற்படிச்சூரியன்றந்ததோன்றல்
வேந்தான்வருந்திக்கிடக்கும்வரைவேறுகாணான்
பூந்தாமரையோனெனவோதும்பொருவிறந்தோன். (௧௩௨)

வந்தானையாரென்றலும்வாயுவின்மைந்தன்யான்முற்
றந்தேனையவஞ்சனையாலித்தடங்குன்றோங்கு
நந்தாவிளக்கேபெனயாருநவிலுமென்றாழ்
தந்தான்வயினற்றொழும்பேபுரிவேனெனச்சாற்றிநின்றான். (௧௩௩)

அற்றேலவனெங்குளனோதெனவாங்கவற்குச்
சொற்றானவன்செய்தியனைத்தையுஞ்சொற்றதன்றி
எற்றேபகர்வேணினையென்னலுமெந்தைநோக்கக்
கற்றார்பரவுமிளையோன்கனிந்தோதிநின்றான். (௧௩௪)

விடைபெற்றவனேகியகன்றுவிடையதென்ன
நடைபெற்றகன்றொருஞாயிறுமைந்தனார்கட்
கடைபெற்றனைத்துமெடுத்தோதினன்காளைதானுஞ்
சடைபெற்றசெந்நெல்வயலுடையனைச்சார்வலென்றான். (௧௩௫)
என்றேயுரைத்தொருசாம்புவனீலனெய்த
நன்றேய்தருமாருதியோடுநடந்துநீலக்
குன்றேயனையானடிசார்ந்துகுறுகலோடும்
இன்றேதவிர்ந்ததுனதின்னலெனைத்துமென்றான். (௧௩௬)
நாகந்தணந்துகடன்ஞாலநலக்கவந்தோன்
சோகந்தணந்துவிடுகென்றுதுணிந்துரைப்ப
வேகந்தருமேழ்பரியோன்றரும்வெய்யகாளை
மேகந்தனைநாடுபைங்கூழெனவீறினானே. (௧௩௭)
உண்டாயதொரையமவற்குளதம்பலன்றன்
பண்டாலிலையிற்றுயிலும்பரமேட்டியென்றே
கொண்டான்குலமாருதியான்குறிக்கின்றகொன்று
விண்டான்வெலற்காவதுகொல்விறலோனையென்றான். (௧௩௮)
ஐயத்தினின்றவவன்றன்குறிப்பாங்கறிந்த
சையத்தையொத்ததனிமாருதியிஞ்சிருந்த
மையொத்தளாயமரமேழுமுருவிநிற்ப
வையத்தவன்வாளிவிடக்கெடுமம்மரென்றான். (௧௩௯)

வேறு.

அரிந்தமன்றனைக்கொண்டவரணுகலுமமலன்
விரைந்தவண்கொடுவருவதென்னெனவிழைந்திருந்த
மரந்தனைக்கொடுமரந்தனிற்சரந்தொடுத்தெய்ய
இருந்தசெம்முளனென்றனையிந்திரமுணர்ந்தோன். (௧௪௦)
கண்டுகொண்டனன்கடுத்தமையாண்டகாகுத்தன்
புண்டரீகக்கட்புயலனையான்பொருவிறந்த
மண்டுகாதலிற்றம்பியைநோக்கியென்வரிவில்
கொண்டுநல்குதியென்றனன்கொற்றவிலம்மா. (௧௪௧)
நாண்வளைத்தொருசரந்தனைத்தொடுத்தனனம்பி
மாண்டசீர்த்திசாறம்பியல்லவர்மயர்வுற்றார்
காண்டகச்சரமராமரங்களினிடையெய்திக்
கீண்டுமாநிலங்கேழலாணுழையடைந்ததுவே. (௧௪௨)
கண்டயாவருங்களிமகிழ்சிறந்தனரனையோர்
விண்டகன்றனர்வந்துழிவிண்ணளாமெற்பைப்
புண்டரீகக்கட்புரவலன்றம்பியைநோக்க
வெண்டவாவிரலானதைபெற்றிநின்றனனே. (௧௪௩)

சென்றவெற்புடம்பிருவிசும்படைந்ததிர்ந்தெய்தி
நின்றதன்னிலையுற்றதுநெடியவனோக்கி
இன்றிதன்பரிசோதெனமாருதியெனைத்தும்
அன்றுகூறியேபிரப்பினனுங்கசன்றனரே. (கசச)

வெய்யகானகமெனைத்தையுங்கடந்தனர்விரைந்து
மையளாவியசிகரிசூழ்கிட்கிந்தைமருங்கே
ஐயனோடவணணுகினரமலனும்பரிதிச்
செய்யமைந்தனைநோக்கியேசெப்பலுற்றனனே. (கசரு)

சென்றழைத்திடுன்றம்முனைச்செருச்செயற்கென்றான்
நன்றிராகவன்கேட்டலுஞாயிறுதந்தோன்
அன்றினார்புரமட்டவனடிமலர்த்தொண்டின்
நின்றவாலியைக்கூய்நெடிதார்த்தனனின்றான். (கசசு)

வந்தனன்கொடுங்கூற்றுநேர்வாலியும்வந்து
சிந்திடச்செய்தான்ஞாயிறுசேய்தனைச்செருவில்
அந்திலாங்கவனொருவழிதணந்தமலன்றன்
சந்தமாமலர்ச்சீறடியிறைஞ்சியேதாழ்ந்தான். (கசஎ)

இரவிகான்முளைதன்னையவ்விரவிதன்குலத்தோன்
பரிவினோர்கொடிகந்தரத்திடநனிபடர்ந்தான்
உரனுறுஞ்சிந்தைவாலிபாலனையனுமுட்கித்
திருவிலானையும்வருத்தினன்றேவரும்வெருவ. (கசஅ)

இன்னவேலையிலிராகவன்வில்லினைவளைத்துத்
துன்னுநாணெறிந்தொருசரந்தூண்டினன்றூண்டி
அன்னவாலிதன்மருமநேர்விடுப்பவுமனையான்
என்னிதென்றதைத்தன்கையாலிறுகுறப்பிடித்தான். (கசகூ)

சரமெனும்படிதெரிந்தனன்றெரிந்தெனைத்தசைப்பார்
ஒருவரேனுமின்றாயினுமம்மவோவொருவென்
உரனடுச்செலுத்தொருவன்பேருணர்குதுமென்ன
அரிததன்றலைப்பொறித்தவத்திருப்பெயரறிந்தான். (கரு0)

தம்பிதன்னையும்விடுத்தனன்றன்னையுமறந்தான்
உம்பரானருளிருந்தவாவீதெனவுன்னி
அம்புவித்தலைக்குருதியினிடைப்படிந்தயர
நம்பியும்மிளையானொடுமவனுழைநடந்தான். (கருக)

நடந்துவந்தசாகுத்தனைநயந்தவனோக்கிக்
கடந்தனைக்கண்டபின்றைநுன்கருத்ததுதிறம்ப
இடம்பெற்றிட்டதென்றியம்பியாங்கிருந்ததம்பியையுந்
தடங்கையாற்பிடித்திறைவனின்சரணெனவிட்டான். (கருஉ)

பாங்கிருந்தசில்லோர்தமைவிடுத்துத்தான்பயந்த
ஓங்கலன்னவங்கதன்றனையழைமினென்றுரைத்தான்
ஆங்கவன்வரவவனையுமண்ணல்பால்விடுத்தே
தீங்கிலானிவன்றன்னையுங்காக்கெனச்செப்பி. (௧௫௩)

ஐயவென்றொருவாலலாதவ்விராவணனை
வையமீமிசைவெல்லுவதில்லெனமகிழேன்
வெய்யவாற்றலைப்படுத்ததுவிமலநின்கணையொன்
றையமின்றியேவென்றிடுமதற்கியான்சான்றால். (௧௫௪)

இப்படைக்கடற்கெந்தைநின்கணையெனத்தகுவோன்
செப்பமாருமஞ்சனைதருஞ்சிறுவனென்றுணர்மற்
றப்பராங்கதிதருதியெற்கென்றவன்றானுங்
கைப்புலக்கணைவிடுப்பவாருயிர்கவர்ந்ததுவே. (௧௫௫)

வாலிவிண்ணுறமற்றவன்றம்பியைநோக்கி
ஏலவிங்கயர்கின்றதெனிவன்றனக்கீமஞ்
சாலநீநடத்தென்றுமாருதியொடுஞ்சாற்ற
ஞாலமேலவர்மஞ்சனோடரற்றினர்நலக்க. (௧௫௬)

தம்பியால்வனசரந்தனக்கரசனேயாகச்
செம்பொன்மாமுடிபரிதிதன்சேய்தனைக்கவித்து
நம்பியுங்கடுங்கார்வரமதங்கனல்வரையில்
உம்பலன்னவனொடும்வதிந்திருந்தனனுப்பால். (௧௫௭)

வனசரங்களுக்கரசெனமணிமுடிபுனைந்த
தினகரன்சுதன்செங்கரும்பன்னசொல்லியர்பான்
மனமியைந்தவர்மயக்கினிலாழ்ந்தனன்குரக்கின்
இனமெலாம்வரவொற்றினைவிடுத்தினிதம்மா. (௧௫௮)

ஐவகைப்பெரும்பாதகத்தொன்றெனலாய
பொய்வழிக்குரித்தாமதுமாந்தியபுன்மைச்
செய்கையாழ்ந்தவத்திருவிலியயோத்திபரிறையங்
கைதினோதியசொல்லையுமறத்துறந்தனனால். (௧௫௯)

மன்னர்மன்னவன்மைந்தனுமரபினாற்றம்பி
தன்னைநோக்கிநந்தமக்குரைசெய்ததுமறந்தான்
அன்னவன்கருத்தறிந்துவாவென்றனனவனும்
பின்னவன்பெயர்ந்தேகினனவன்பெருநகர்வாட். (௧௬௦)

வேறு.

பராவரும்புகழ்ப்பண்ணவனெல்வயல்
விராவயோத்திநகருறைவேந்தன்றன்
தராதலம்புகழ்தம்பிவரக்குரக்
குராவருஞ்சினங்கண்டுளைந்தன. (௧௬௧)

வழியடைத்தனமால்வரைகைக்கொடு
பழிவிளைத்தனபண்ணவன்றம்பியுங்
கழலினெல்லையினுந்தினன்கார்வரை
முழுதுந்தான்றுகளாயினமுன்னரோ. (௧௬௨)

வந்தவேகமுணர்ந்திடுமாருதி
சிந்தைநொந்துதிறம்பினனுலை
இந்தமாநகர்க்கெய்திடுந்தீங்கென
எந்தைமுன்னரிளையனசெய்தனன். (௧௬௩)

தாரைதானுந்தடுத்தனள்கண்டனள்
ஆருமேமறவாரையவன்பினன்
நீருதவுமந்நீர்மையைநீள்கடற்
பாரிலென்றுபரிவினிலோதினள். (௧௬௪)

என்றுகூறவிளையவன்றன்சினம்
பொன்றிநிற்பப்புலங்கெழுமாருதி
நன்றுநாடிவந்தானைநலத்தினன்
மன்றநன்றிமறந்தனிராமென்றான். (௧௬௫)

அற்றதன்றீண்டலகில்படைவரா
ஒற்றர்தம்மைவிடுத்தனமொல்லையில்
இற்றைநாளையினெய்துமதென்றிடக்
கற்றதம்பியாற்றக்கவனீங்கினன். (௧௬௬)

மாருதியங்கதனொடுமாண்பினாற்
சாருமெல்லையிற்றான்வந்துமுன்னினான்
சூரியன்றருதோன்றலவனொடும்
ஆரியன்றனிருக்கையையண்மினான். (௧௬௭)

வந்தசேனையைவள்ளன்முன்காட்டிநின்
றெந்தையென்னைபணியென்றிரத்தலு
முந்துநாடவிடுகெனமுன்னவன்
சிந்தையோர்ந்தவன்செப்பிவிடுத்தனன். (௧௬௮)

ஆண்டகையாமனுமனைக்கூவியே
வேண்டியேகுவிழைந்தவாசிக்கென
நீண்டவன்விரலாழியுநேரிழைக்
காண்டுணர்த்தடையாளமுநல்கினன். (௧௬௯)

பெற்றவஞ்சனைபெற்றமகன்விறல்
உற்றவாலியுதவுசேய்பிற்படர்
சுற்றுநீலனர்சாம்பனுறப்படை
சுற்றிடத்தென்றிசைசெலத்துன்னினார். (௧௭௦)

இன்னவாறகன்றேகுழியாங்கணும்
அன்னவாழிடமாருமறிந்திலர்
மன்னுதென்கடலுற்றுமகேந்திரம்
என்னுமால்வரையெய்திநின்றாரரோ. (௧௭௧)

என்செய்வாமெவனுங்கண்டிலேமெழிற்
பொன்செய்மேனிப்பொலங்கொடிக்காசவே
மின்செய்துண்டத்துமேலோன்சடாயுபோல்
வன்செயற்கொலையெய்தன்மரபென்றார். (௧௭௨)

அன்னகாலையடைந்தனனன்னவன்
முன்னர்வந்துமுளைத்தசம்பாதியென
பின்னவன்றுஞ்சுபெற்றியெவ்வாறெனப்
பன்னினாரவனுற்றபரிசரோ. (௧௭௩)

விதியினன்றுவினைகிலதொன்றெனா
மதிதெளிந்துமராமரமேயெனக்
கதுவுதோளான்கவின்றிருநாமமும்
பதியுமன்பிற்பகருமென்றனரோ. (௧௭௪)

எருவையேந்தலியம்பிடயாவரும்
இரவிதன்குலத்தோன்றலிரும்பெயர்
பரிவினோதப்பறையுமவண்சிற
குரிமையான்வளர்ந்தோங்கியதென்பவே. (௧௭௫)

பின்னவன்சனகிப்பெருங்கற்புடை
யன்னைவேலையிலங்கையகன்பொழிற்
துன்னிநின்றனணீவிர்கொடுங்கடல்
தன்னைத்தாவியடைவதுசால்பென்றன. (௧௭௬)

நீலன்சாம்பனொடுங்கதனீள்கடல்
வேலைசூழிலங்காபுரமேவிடச்
சாலவாற்றலிலமெனச்சாற்றினார்
காலின்மைந்தன்கடுகியுற்றனரோ. (௧௭௭)

உற்றிலங்கையொருங்குதுருவியே
கற்றைவார்குழற்சீதையைக்காண்கிலான்
மற்றுநாடியசோகவனந்தனை
உற்றவத்தினினன்குகண்டானரோ. (௧௭௮)

கண்டுகாகுத்தன்கற்பினலந்தினைப்
புண்டரீகமலர்ப்பதம்போற்றிநின்
றண்டர்வாணனளித்தருளாழியைக்
கொண்டுநல்கக்குறையகன்றனரோ. (௧௭௯)

# திருமுலைவாயிற்புராணம்

சனகியும்பரிவோடவன்றன்கரந்
தினகரன்போற்செறியுஞ்சூடாமணி.
தனையுந்தந்தடையாளமுஞ்சாற்றினாள்
தனைவிற்பெற்றவன்சூழலழித்தனன். (௪௮௦)

தெவ்விராததெசமுகனோர்ந்தவண்
இவ்விராவினடுபடையேவினான்
அவ்விராகவன்றூதனழித்தனன்
செவ்வியானக்கனும்பொரச்சென்றனன். (௧௮௧)

அனையனைக்கொன்றரியெனநின்றவவ்
வனசரன்றனைக்கைக்கொடுவந்துனைக்
களிவினெய்துவலென்றுகடற்படை
தனைமிகக்கொடிராவணிசார்ந்தனன். (௧௮௨)

சார்ந்தவன்றனிமாருதிதன்னொடு
நேர்ந்துபோர்கமலாசனனீள்கணை
யோர்ந்தெடுத்துவிடுத்தனனொல்லையிற்
பேர்ந்தனன்பிணித்தாங்கவன்றன்னையே. (௧௮௩)

திசையிரைந்துஞ்செழுமலர்தூய்த்தொழ
இசைநிறீஇயவிராவணன்றன்னையவ்
வசையிலையன்விடவருந்தூதனுங்
கசிவினாற்சிலகட்டுரைகூறினான். (௧௮௪)

வந்தபான்மைவகுத்துரைசெய்தனன்
நிந்தையாளனிவற்கொலைநேர்கென்றான்
அந்தவெம்மொழியைத்தடுத்தானறந்
தந்ததென்னத்தயங்கியவீடணன். (௪௮௫)

வாலினிற்கனல்வைத்தனன்மாருதி
வேலைசூழிலங்கைவியன்றெருச்
சாலையக்கனலெழத்தான்வகுத்
தோலிடத்தான்மகேந்திரமுற்றனன். (௧௮௬)

ஒல்லையாங்கவர்க்கொண்டொடிச்சீதையாந்
தல்லியைக்கண்டதன்மையுணர்த்தினான்
கல்லைநேர்புயத்தங்கதனாதியோர்
எல்லையில்புகழாளனையெய்தினார். (௧௮௭)

முந்தியெய்தினன்மூதறிவாளனும்
எந்தைகண்டனனேழையையென்றுந்தன்
சிந்தைநின்வயிற்செய்தசமத்தியை
நந்திடாக்கற்பின்ஞானக்கொழுந்தினை. (௪௮௮)

என்றுகூறியிலங்காபுரந்தனிற்
சென்றுகண்டதிறந்தனைக்கூறிய
தன்றியன்னையளித்தசூடாமணி
நன்றுநல்கிநலக்கவணங்கினான். (கஅகூ)

அனகனும்மிளையானொடனீகமுந்
தனையடையத்தடவரைதான்விடுத்
தனையின்வெஞ்சிறைதன்னையகற்றிடக்
கனைகடற்கரைகண்டனனென்பவே. (ககூ0)

தென்னிலங்கையர்கோமகன்சேனகர்
தன்னைமாருதிதான்சுட்டவித்தபின்
மன்னும்வானிடமாகவதிந்தனன்
மின்னுபுட்பகமேறிவிளங்கியே. (ககூக)

அரக்கர்யாவருமாங்கவனோடுறைந்
திருக்கமாமலரானையினிதழைக்
தருக்கனுஞ்சுடர்மாழ்கவமைக்கெனப்
பரக்கமற்றதைப்பாங்கினியற்றினான். (ககூஉ)

மீட்டுமற்றவ்வியனகரெய்தியே
தீட்டும்வான்புகழ்சேருமமைச்சரைக்
கூட்டிமந்திரங்கோமகன்றானினி
கேட்டுநிற்பக்கிளத்துவதாயினர். (ககூ௩)

மகோதரன்முதன்மந்திரத்தோரெலாம்
பகாதபண்பிற்பகர்ந்தனர்சார்பினாற்
சுகோதயிற்சுலவியவீடணன்
விகாரமற்றமனத்தின்விளம்பினான். (ககூச)

ஐபகேட்டியிரணியனாதியாம்
வெய்யவீரரிருந்தனர்மிக்கவர்
வையமேற்செருக்கான்மடிந்தார்பிறன்
தையலைக்கவர்ந்தாரலர்சாற்றவே. (ககூரு)

என்றவற்கிங்கினையனநீதிகள்
நன்றுகூறிநிறுத்தினனக்கவன்
இன்றெனைத்தவிர்ந்தேகுதியென்னலும்
அன்றுமந்திரரோடகன்றானரோ. (ககூசு)

அதன்றிராகவன்றன்னையடைக்கலம்
புகன்றடைந்தனன்புண்ணியன்றானுமங்
குகந்திலங்கைவளங்கேட்டுவன்றனை
மகிழ்ந்துமாமுடிசூட்டினனென்பவே. (ககூஎ)

தொடுசடலைக்கடப்பதுசூழ்ந்தவன்
அடைவினிற்றருப்பாசனத்தெய்தியே
கடலரசினைக்காமுறநாடினான்
உடனுருமன்னவொண்கணையேவினான். (௧௯௮)

வருணன்றானுறமற்றவ்வயோத்தியர்க்
கரசன்றன்கருத்தோதவனையனும்
பரிவினாற்சேதுபந்தனஞ்செய்தியேல்
ஒருவந்தங்கருத்தெய்துமென்றோதினான். (௧௯௯)

வேறு.

மாதுபங்கனைமலர்ச்சையானருச்சனைபுரிந்துங்
கோதுசெய்துழல்குணமிலிதனைக்குறைத்தொழித்த
தீதகன்றிடச்செங்கையால்வழிபடல்புரிவான்
சேதுபந்தனஞ்செய்தனன்சிறுகுரக்கினத்தால். (௨௦௦

நளனியற்றியசேதுவைநயந்திறைகணடிவ்
வளவதென்னலாந்தரத்ததன்றெனவுரைவழங்கி
உளமகிழ்ந்தரும்படையெலாமொருங்குசூழ்ந்தெய்து
வளனிலாஞ்சுவேலத்தடவரைதனையடைந்தான். (௨௦௧

ஒற்றர்தம்மையேவிடுத்தனனுருத்தவர்தம்மைக்
கற்றவீடணன்கலக்கினன்மற்றவர்கடல்சூழ்
வுற்றமாநகருற்றனருரைத்தனர்நடந்த
பெற்றியாங்கவன்பிறங்கன்மாளிகைமிசைப்படர்ந்தான். (௨௦௨

இருதிறத்தவரொருவரையொருவரங்கிருந்தே
மருவிநோக்கினர்வானவன்றருமெழின்மைந்தன்
பொருதவன்றனமகுடபங்கம்புரிந்தகன்றான்
கருதலர்க்கரியெனத்தகுங்காளைநெஞ்சழன்றான். (௨௦௩

நொச்சிமேலவண்குரக்கினம்வளைந்தனநொய்தின்
விச்சைநீங்குமப்பாதகன்வியன்படையனைத்தும்
அச்சுறத்திருநகர்தனைக்காக்கெனவறைந்தான்
நச்சியங்கதன்றனைநம்பியொற்றெனவிடுத்தான். (௨௦௪

சனகன்பாவையைவிடுத்திறைசரண்சரணென்னக்
கனிவினெய்தினையாயினிற்கோறலன்கண்டாய்
அனகனல்லையேற்சமர்செயவருகெனவழைத்தான்
நினதுநெஞ்சினுட்டுணிபியவணென்னெனவிகழ்த்தும். (௨௦௫

போரத்துணிந்தனனின்பெயர்யாதெனப்புகல
அரக்ககேட்டியானின்றனைவாலினொடார்த்துப்
பரக்கவேசிறைவைத்தவன்பயந்தநன்மைந்தன்
தெரிக்கவேண்டுமோவினியுமென்றனன்றிறல்வீரன். (௨0௬)

நீதியாவையுநிகழ்த்தினனிலையிலாவாழ்வைப்
போதமெய்யெனக்கருதியபுலைத்தொழிலரக்கன்
வாதமைந்தனினுங்கொடியானினிவல்லே
போதினைச்சுருக்காதிவற்கொன்மெனப்புகன்றான். (௨0௭)

மயிலைத்தண்பொழிலோடெடுத்தன்றிமால்வரையாங்
கயிலைக்குன்றையும்பறித்திடுமாற்றலான்கனன்று
சயிலப்பொற்புயனெடுந்தம்பியோடும்வெஞ்சமரின்
வயினறப்படையிழந்துதன்னகருழைவர்தான். (௨0௮)

தும்பகன்னனைவிடுத்தனன்போர்செயக்கொடியோன்
தம்பியேமுதலானவர்தம்மொடுஞ்சமர்செய்
தும்பரான்கரத்தானுயிர்துறந்தனனுப்பால்
உம்பனோதிகாயனைவிடுத்தனனுலப்ப. (௨0௯)

இலக்குவன்பொருதவன்றனையழித்தனனிலங்கை
அலக்கணுற்றதாங்கவனுயிர்துறந்தனனதற்பின்
விலக்கரும்புகழிராவணிவிரைந்தடற்றொடங்கிக்
கலக்கினனொருகாகுத்தன்சேனையாங்கடலை. (௨௧0)

நாகவெங்கணைவிடுத்தனனிராவணிதம்பி
சோகமெய்தினன்றம்பிதன்றுயர்பொறுத்திலனாய்
வேகவெங்கருளன்வரவிரைந்தகன்றதுவாற்
போகநாடரும்போற்றினர்புண்ணியற்பரசி. (௨௧௧)

பின்னர்வான்படைசெறிதரப்பெருங்களத்தாங்குத்
தன்னையொப்பிலாத்தனிமகரக்கணனடைந்து
மின்னுமிழ்ந்திடுகணைதொடுத்திறைவன்மேற்சொரிய
அன்னவன்றனையகற்றினனருங்கணைதொடுத்தே. (௨௧௨)

இந்திரன்பகையிளையவன்றன்னையேயெய்திச்
சிந்தவெம்படைதொடுத்தனன்சிங்கவேறனையான்
அந்தமில்படைக்கலம்விடுத்திடவகங்கலங்கிக்
கந்தமாமலரோன்படைவிடுத்தனன்கடிது. (௨௧௩)

அந்தவேலையினிளையவனருயிர்துறந்து
சிந்தைகெட்டழிந்திருந்தனன்செஞ்சுடரவன்பான்
முந்தயிந்திரமோதியமூதறிவனுஞ்சென்
றந்தமில்புகழ்மருந்துமாமலைகொடங்கார்த்தான். (௨௧௪)

